# முகவுரை

முன்னொரு காலத்தில் தாரா நகரத்திலே போஜன் என்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவன் கலைகளில் பற்று உடையவன். கவிகளைப் பாராட்டுபவன். அவனுடைய சபையில் காளிதாசன், பவபூதி, பாணன், வரருசி, மயூரன், முதலிய பெரும் புலவர்கள் பலரும் இருந்தார்கள். அவனுடைய சபையை நாடி, நாள்தோறும், வேறு பல புலவர்களும் வருவதுண்டு. சமயத்துக்குப் பொருத்தமான பாடல்களை அவர்கள் பாடினார்கள் என்றும் வரிசை அறிந்த அரசனிடமிருந்து பரிசு பெற்றார்கள் என்றும், போஜப் பிரபந்தம் என்னும் சிறு நூல் கூறுகிறது.

வரலாற்று முறையில் பார்த்தால், அந்த நூலில் கூறிய செய்தி எதுவும் உண்மையில்லை. அதில் சொல்லப்பட்ட கவிகள் எல்லோரும் ஒரே காலத்தில் வாழவில்லை. ஆயினும், அந்த நூல் கவிதைச் சுவை நிரம்பியது. கவிதைகளின் சுவை நயத்தைக் கதைகளின் வாயிலாக, அழகாக, எடுத்துக் காட்டி உணர்த்துவது. படிக்கப் படிக்க இனிமை பயப்பது.

அந்த நூலில் அடங்கிய கதைகளில் சிலவற்றையும், அவை போன்ற வேறு சில கதைகளையும், அவ்வப்போது 'ஆனந்த விகடன்' முதலிய பத்திரிகைகளில் வெளியிட்டு வந்தேன். அவைகளை ஒன்றாகத் தொகுத்து, பல புதிய படங்களோடு, தனி நூலாக இப்போது 'கலைமகள்' காரியாலயத்தின் மூலமாக வெளியிடுகிறேன்.

பெ. நா. அப்புஸ்வாமி

# பொருளடக்கம்

# 1. தேன் துளி

முன்னொரு காலத்தில் தாரா நகரத்தில் போஜராஜன் என்னும் அரசன் ஒருவன் அரசாண்டு வந்தான். அவன் கவிதைச் சுவை அறிந்தவன். தானே கவி பாடவும் வல்லவன். அது மட்டும் அன்று. தன் எதிரே வந்து நிற்பவர்களையும் கவி பாடச் செய்யும் அற்புதத் திறமை வாய்ந்தவன் என்னும் புகழும் அவனுக்கு உண்டு. தன்னிடம் வந்த கவிகளுக்கெல்லாம் அவன் அளவே இல்லாமல் பரிசுகளை வழங்கி வந்தான்.

போஜராஜன் தன் சபையிலுள்ள கவிகளுக்கு அடிக்கடி சமசைகளை இடுவது வழக்கம். சமசை என்பது பாடி முடிக்கும்படி ஒருவனுக்குக் கொடுக்கும் கவி உறுப்பு. அதாவது அரசன் ஏதாவதொரு கருத்தைத் தன் மனத்தில் எண்ணி, அந்தக் கருத்தின் ஒரு பகுதியைக் கொண்ட பாவின் ஓர் அடியை வெளியிட்டுச் சொல்வது; அங்குள்ள கவிகள் அந்த அடியை நாலாவது அடியாகக் கொண்ட பா ஒன்றை இயற்றி, அரசன் கொண்ட கருத்தையே வெளியிடவேண்டும். அது இயலாவிட்டால், அதற்கு அடுத்த படியாக, அரசன் சொல்லிய அடியின் கருத்தோடு இணைந்த கருத்து ஒன்றைக் கொண்ட பாவிலே அந்த அடியையும் பொருத்தி, வெளியிட வேண்டும். இம் மாதிரியான வாய்ப்புக்கள் எத்தனையோ தடவை அந்த அரச சபையில் நிகழ்ந்திருந்தன. அப்பொழுதெல்லாம் மற்றக் கவிகள் எல்லோரும், எவ்வளவோ திறமையாகப் பாடி வந்த போதிலும், காளிதாஸன் ஒருவனே, ஒவ்வொரு தடவையிலும், அரசன் கொண்ட கருத்தைத் தவருது அறிந்து, வெளியிட்டு வந்தான். போஜராஜனுக்கும் காளிதாஸனுக்கும் அத்துணை மன ஒற்றுமை இருந்தது.

அவ்விருவர்களுக்கும் அவ்வளவு ஒற்றுமையுள்ள கவிதைச் சுவை உணர்ச்சி இருந்தது.

அரசனுடைய கொடைச் சிறப்பும் சுவை அறியும் தன்மையும் நாட்டில் எங்கும் பரவின. அவனைக் கண்டு, கவி பாடிப் பரிசு பெற எண்ணி, அவனுடைய சபைக்கு வரும் கவிகளின் தொகை கணக்கில் அடங்கா திருந்தது. வந்தவர்கள் எல்லாரும், தாங்கள் இயற்றிய கவிதையின் தன்மைக்கு ஏற்றபடி, பரிசு பெற்றுச் சென்றார்கள்.

ஒரு நாள் போஜராஜன் தன்னுடைய அவை மன்றத்தில் மிகவும் ஒய்யாரமாகக் கொலு வீற்றிருந்தான். காளிதாஸன் முதலிய மகா கவிகளும் மற்றக் கவிகளும் தங்கள் தங்கள் இருக்கைகளில் உட்கார்ந்திருந்தார்கள். அரசன் தூண்ட, அவர்கள் பற்பல வகையான சுவைகளை உடைய பாக்களைப் பாடிக்கொண்டும், மிக அழகாகப் பேசிக்கொண்டும், இருந்தார்கள். கவிதைச் சுவை அங்கே அலை அலையாய் மோதிய வண்ணமாகவே இருந்தது.

ஒரு நாள், வாயிற் காப்போன் வந்து, அரசனை வணங்கி, "அரசர்க்கரசே! யாரோ ஒரு கவி வந்திருக்கிறார்; அவர் இருப்பது காசியாம். அவருடைய பெயர் பவபூதியாம். அரண்மனை வாயிலில் அவர் காத்து நிற்கிறார்" என்றான். "அப்படியா? அவரை உள்ளே அழைத்து வா" என்றான் அரசன்.

வாயிற்காப்போன் உடனே வெளியே சென்று, அந்தக் கவியை அழைத்து வர, அந்தக் கவியும் அரசனை நோக்கி, "உமக்கு எல்லா நலங்களும் பொலிந்து விளங்கட்டும்" என்று வாழ்த்தி, அரசன் காட்டிய இருக்கையில் அவன் ஆணைப்படி, உட்கார்ந்தான்.

பின்பு, அந்தக் கவி அரசனை நோக்கி, ஒரு பாடலைப் பாடினான். அதன் பொருள் பின்வருமாறு: "ஐய!

தேனையே பருகி வாழும் வண்டுகளைக் கூவி அழைத்து, "எம்மிடம் உள்ள தேனை உண்ண வாருங்கள்" என்று பாரிசாத மலர்கள் வருந்தி வேண்டுவதில்லை. சந்திர பிம்பத்திலிருந்து வீசும் குளிர்ந்த கதிர்களைப் பேராவலோடு பருகி வாழும் நிலவு முகி (சகோதர) பறவைகளை, 'நிலவு பொழிகிறது, நீங்கள் வந்து அதை உண்டு களியுங்கள்' என்று ஒருவரும் பரிந்து அழைப்பதில்லை. இங்கே இந்த அரச சபையில் கூடியுள்ள பெரியோர்கள் அனைவரும் அறிவிற் சிறந்தவர்கள். ஆதலால் தேனினும் இனிய சுவை நிரம்பிய எம்முடைய கவிதைகளில் காணும் சொல் நயம் முதலியவற்றை அவர்கள் யாவரும். தாமாகவே விரும்பிக் கேட்பார்கள், மட்டிலா மகிழ்ச்சி யுறுவார்கள், பரவசம் அடைவார்கள். ஆகையால், இங்குள்ளவர்கள் ஒருவரையும், 'யாம் கூறுவதைக் கேளுங்கள்' என்று நான் வேண்டப் போவதில்லை."

அங்குள்ளவர்கள் அனைவரும் அக் கவிதையைக் கேட்டுச் சற்றே வியப்பும் திகைப்பும் அடைந்தார்கள். வண்டு நுகரும் தேனைப் போலவும், நிலவு முகிப் பறவை பருகும் நிலவைப் போலவும், கவிதையானது அந்த அரச சபைக்கு உயிரளிக்கும் நல்லுணவாக இருந்தது என்று, அந்தச் சபையிலுள்ளவர்களை அக் கவி புகழ்ந்து கூறியது அவர்களுக்கு மகிழ்ச்சியளித்தது. ஆனபோதிலும், அவன் தன்னுடைய கவிதையைத் தானே புகழ்ந்து பேசியது இடன் அறிந்து நடப்பதையே முறையாகக் கொண்ட அச் சபைக்கு அருவருப்பையே தந்தது.

அவர்களுடைய மன நிலையைச் சற்றேனும் கருதாத பவபூதி மறுபடியும் மற்றொரு செய்யுளைப் பாடத் தொடங்கினன். அதன் பொருள்: "எம்மிடமோ ஏறிச் செல்லப் பல்லக்கு ஒன்றும் இல்லை; யாம் எமது உடலில் அணிந்து அழகுபடுத்திக் கொள்வதற்குப் பொற்காப்பு முதலிய அணிகலன்கள் ஒன்றும் இல்லை. சிறந்த, உயர் சாதிக் குதிரையின்மீது யாம் ஏறி வரவும்



இல்லை. அழகுமிக்க ஆடை ஒன்றையும் யாம் அணிந்து, பகட்டாய் நடக்கவும் இல்லை. இவை ஒன்றுமே எம்மிடம் இல்லை. ஆயினும், எம்மிடம் இருப்பது யாதெனில், இப் பூவுலகு முழுவதிலும் எப்புலவர்களெல்லோரும் கவிதையில் ஈடுபட்டு, அதைப் போற்றிப் பாராட்டுகிறார்களோ, அப்புலவர்களுள் ஒருவருமே பாக்கி இல்லாமல், அவர்கள் அனைவருடைய மனங்களையும் கவர்ந்து களிக்கச் செய்யும் ஆற்றல் உடையதாயும், அவர்கள் அனைவருடைய தலைகளையும் வணங்கச் செய்யும் பெருமை வாய்ந்

ததாயும், குற்றமற்ற தாயும், உள்ள மிகச் சிறந்த கவிபாடும் திறமையேயாகும்.''

இதைக் கேட்டதும், அந்தச் சபையில் உள்ள பெரியோர்கள், தம்முள் எழுந்த கோபத்தை அடக்கிக் கொண்டார்கள். ஆயினும், அங்குள்ள இளைஞன் ஒருவனுக்குச் சினம் தாங்கவில்லை. அவன் பாண கவியின் மகன். அவன் மிக்க ஆத்திரத்தோடு, 'அடா பாவி, தாரா நகரத்தில் ஆட்சி புரியும் பேரரசனான போஜ ராஜனுடைய சபையில் அன்றோ நீ இருக்கிறாய்? இந்த இறுமாப்பு உனக்கு நல்லதன்று. வீண் பெருமை பாராட்டுவதற்கு இது இடமும் அன்று. உனது வீண் செருக்கை அடக்கு'' என்றான். மேலும் அவன், ''நெஞ்சினால் ஒருவன் பாணனை நினைத்த உடனேயே, அவனுக்கு மூச்சும் வெளிவராமல், அடங்கி ஒடுங்கிப் போகுமே. அப்படி



யிருக்க, வீண் செருக்குடைய சொற்களால் அமைந்த கவிதையின் வெள்ளம் இங்கு வெளிக்கிளம்ப ஏது இடம்? இறுமாப்புக்கு இங்கே இடமே கிடையாதே' என்று கோபத்தோடு சொன்னான்.

அப்படி அவன் பேசியபோது, பாணன் என்னும் கவிக்கும் கீழ்ப்பட்டவன் என்ற அவ் இளைஞன் தன்னைக் கருதி, இகழ்ந்துரைத்ததைப் பொறாத பவபூதி, கோப முற்று, படபடவென்று ஒரு பாட்டினால் அவனுக்குப் பதிலுரைத்தான்.

அதன் பொருள்: 'தனக்கு வசம் இல்லாதனவாயும், தாமாகவே வந்து அமையாதனவாயும், உள்ள சொற்கள் சிலவற்றை வலிய இழுத்து வந்து, பல இடங்களிலிருந்து கொணர்ந்து திரட்டி, முயன்று முயன்று, ஒரு தொடராகக் கோக்கும் எவனோ ஒருவன், பெயரும் புகழும் அற்றவன், பாணன். சொற்கள் அனைத்தையும் தனக்கு அடிமை கொண்டு, தன் மனம்போல அவற்றை ஆண்டு வரும் கவி ஒருவனோடு போட்டி போட்டு, அவனைக் கண்டு பொறாமைப் படுகிறான், என்றுதானே சொன்னாய்? நன்று, நன்று! இப்படியே அவன் நடந்து வருமானால், பாவம் மலிந்த இக் கலி காலத்தில், எதுதான் இனி நடவாது? பல சொல்லிப் பயன் என்ன? இன்றோ, நாளையோ, இன்னும் ஒன்று நடந்தாலும் நடக்கலாம். பானைகளை வனையும் அற்பக் குயவன் ஒருவன் உலகம் மூன்றையும் இயற்றும் பிரமதேவனோடு போட்டிபோட முயன்றாலும் முயலலாம்'.

கோபமாகத் தொடங்கிய இப்பேச்சை பவபூதி இதோடு நிறுத்திவிடவில்லை. மேற்கொண்டு, அவன்;

'காளிதாஸ கவியினுடைய கவிதையானது எப் பொழுதேனும் என் கவிதையோடு போட்டியிட்டு, அதற்கு ஈடான நிலையை அடைய முயலுமானால், அப்போது அது துணிவாக முன் வந்து விடாது; ஒவ்வோர் அடியிலும்

அஞ்சி அஞ்சி, நடுங்கி நடுங்கியே அது வெளிப்படும்' என்று மிகவும் இறுமாப்பாகப் பேசினுன்.

'கவிச் சக்கரவர்த்தியாகிய காளிதாஸனேயே இவன் இவ்வாறு இகழ்ந்து பேசுகிருனே!' என்று அங்குள்ள கவிகள் அனைவரும் மிக்க மனவருத்தம் அடைந்தார்கள். இதற்குக் காளிதாஸன் என்ன சொல்லப் போகிருனே என்று அவனுடைய முகத்தை நோக்கிய வண்ணமாகவே அவர்கள் இருந்தார்கள்.

பவபூதியின் சொற்களைக் கேட்ட காளிதாஸன், புன்சிரிப்போடு 'நண்ப, பவபூதி, நீ மகாகவி என்பதற்கு ஏதாவது ஐயம் உண்டா? அதைப்பற்றி இவ்விடத்தில் அதிகம் பேசவேண்டிய தேவை என்ன? மிகச் சிறந்த கவிஞர்கள் நிரம்பியிருக்கும் இந்தப் புலவர் சங்கத்துக்கு நம் இருவருக்கும் இடையே உள்ள வேற்றுமை மிக நன்ருகத் தெரியும்; சிவபெருமானுக்கு ஈடான இவ்வரசனுக்கும் தெரியும்' என்று அடக்கமாகவும் மேன்மை நெறி தவருமலும் பேசி, அந்த ஆரவாரப் பேச்சை நிறுத்தினுன்.

அதன் பிறகு அரசன், "காதல் நிகழ்ச்சி ஏதாவது ஒன்றைப்பற்றி நீங்கள் இருவரும் அழகு பெறக் கவி பாடுங்கள்; கேட்போம்" என்று மெல்லச் சொன்னுன். உடனே பவபூதி, முந்திக்கொண்டு, ஒரு செய்யுளைச் சொன்னுன். அதன் அமைப்பையும் அழகையும் கண்டு, அங்குள்ளோர் அனைவரும் வியப்படைந்தார்கள். அப்போது காளிதாஸனும் மற்ருெரு செய்யுளைப் பாடினுன். அதுவும் மிக நன்ருக இருந்தது. இவ்வளவு சிறந்த பாட்டுக்கள் இரண்டினுள் எது சிறந்தது, எது தாழ்ந்தது, என்று அரசன் எப்படி முடிவு செய்யப்போகிருன் என்று அந்தச் சபையிலுள்ள புலவர்கள் அனைவரும் திகைப்படைந்து, ஆலோசனையில் ஆழ்ந்தார்கள்.

அப்போது அரசன் காளிதாஸனைப் பார்த்து, "புலவர் பெரும! பவபூதிக்கு ஈடானவனாக உம்மைக் கூறமுடியாது. நீங்கள் இருவரும் ஒரு தரம் உள்ளவர்கள் அல்லர்" என்றான். 'பவபூதியை அல்லவோ காளிதாஸனைக் காட்டிலும் சிறந்த கவியாக அரசன் கருதுகிறான்!' என்று சபையிலுள்ளவர்கள் எண்ணிப் பரபரப்படைந்தார்கள். ஆனால், பவபூதியின் மனத்தில் மட்டும் உள்ளூறச் சிறிது ஐயம் தோன்றிற்று. ஆதலால், அவன் அரசனைப் பார்த்து, "அரசே? நாங்கள் இருவரும் ஒரு தரமானவர் அல்லர் என்று நீங்கள் பிரித்துப் பேசுவது ஏன்?" என்று கேட்டான்.

அதற்கு அரசன், 'எம் முறையாகப் பார்த்தாலும், நீர் மகா கவி என்பதில் சந்தேகமில்லை' என்றான். இதைக் கேட்டதும் பவபூதியின் மனம் நிறைவு பெற்றது.

அப்போது, பாணன் என்னும் கவி அரசனை நோக்கி' 'அரசே! பவபூதியை மகாகவி என்று சொல்லிவிட்டீர்களே. காளிதாஸனை என்ன என்று சொல்லப் போகிறீர்கள்?' என்று ஆத்திரமாய்க் கேட்டான். அதற்கு அரசன், 'பாண கவியே காளிதாஸன் மகாகவி அல்லன்' என்று தொடங்கியதும், சபையிலுள்ளவர்கள் எல்லாரும் திகைத்துப் போனார்கள். ஆயினும், அரசன் தொடர்ந்து, 'பார்வதிதேவியே ஆண் வடிவம் கொண்டு, இவ் உலகத்தில் தோன்றிய அவதாரமே காளிதாஸன்' என்று அரசன் முடித்தபொழுது, சபை ஆரவாரம் செய்து, அரசனுடைய முடிவை முற்றும் ஒப்புக்கொண்டது.

அப்பொழுது, பவபூதி ஏமாற்றம் அடைந்து, அரசனை நோக்கி, 'அவனுடைய கவியானது எந்தப் பண்பில் என்னுடைய கவியைக் காட்டிலும் மேன்மையாக உள்ளது?' என்று வினவினான்.

அதற்கு அரசன், 'காளிதாஸன் சொல்லிய இக் கவிதையின் மேன்மையை நான் எடுத்துக் கூற

வேண்டுமா? 'காதலியின் முகத்தில் மெல்ல அரும்பிய புன்னகையானது அழகிய செந்தாழை மலரின், மென்மையும் நறுமணமும் பொருந்திய, நுனி சற்றே மலர்ந்ததுபோல் இருந்தது' என்று அவன் கூறியுள்ள உவமை எவ்வளவு பொருத்தமாயும் அழகாயும் இருக்கிறது?' என்றான்.

அதைக் கேட்ட பிறகும் பவபூதி மன அமைதி அடையவில்லை. 'அரசே, நீங்கள் காளிதாஸனின் மீதுள்ள ஒருதலைச் சார்பான அன்பால் இவ்வாறு சொல்லுகிறீர்களே தவிர, வேறில்லை' என்றான்.

அப்போது காளிதாஸன், 'நம்முள் ஒருவருக்கும் கெட்ட பெயர் வரலாகாது. உலகம் முழுவதுக்கும் தலையாய தெய்வமாகிய புவனேசுவரியின கோயிலுக்கு நாம் எல்லோரும் செல்வோம். அவளுடைய திருமுன்பிலே அவளையே முன்னிட்டு வேண்டிக்கொண்டு, தராசுச் சோதனையை நிகழ்த்திவிடுவோமே' என்றான்.

அதற்கு எல்லாரும் உடன்பட்டார்கள். அரசனும் அதை ஒப்புக்கொண்டு, சபையிலுள்ள கவிகள் அனைவரும் தன்னைப் புடை சூழ, புவனேசுவரி தேவியின் கோயிலை அடைந்து, அவளுடைய திருமுன்பில் பவபூதியின் கையில் தராசைக் கொடுத்தான். ஒத்த எடையுள்ள இரண்டு ஏடுகளில், இருவர் பாடிய பாட்டுக்களையும் எழுதுவித்து, அவ் இரண்டு ஏடுகளையும் தராசின் தட்டுகள் இரண்டிலும் இட்டான்.

அப்பொழுது பவபூதியின் பாட்டு எழுதப்பட்டிருந்த பொன் ஏட்டை ஏந்திய தராசுத் தட்டு, சற்றே உயரத் தொடங்கிற்று. அடியார்களுக்கு அருள் செய்வதிலேயே கருத்தாக உள்ள தேவி, அதைக் கண்டு, மனமிளகி, 'இந்த மகா சபையின் முன்னர், பவபூதிக்கு ஓர் அவமானமும் நிகழலாகாது' என்று கருதி, தன்னுடைய காதில் தான் அணிந்திருந்த

வெண்தாமரை மலரிலுள்ள தேன் துளியை தனது இடக் கரத்தின் விரல் நுனியால் எடுத்து, பவபூதியின் பாட்டை எழுதியிருந்த ஏட்டின்மீது தெறித்தாள். தேன் துளி தெறிக்கவே, பவபூதியின் ஏடும் காளிதாஸனின் ஏடும் ஒத்த எடையுள்ளவைகளாயின. அத் தட்டுக்கள் இரண்டும் ஒரே மட்டமாக நின்றன.

தேன் அருள் சுரந்து, அன்பு பூண்டு, பவபூதிக்கு அருளியதைக் கண்ணுற்ற காளிதாஸன், அவளை வாயார, மனமாரப் புகழ்ந்து, 'நான், மட்டில்லாப் பேறு பெற்றேன். உன்னால் நான் நன்குமதிக்கப் பெற்றேன்' என்று பாராட்டினான். பவபூதியும் இந்த அற்புதக் காட்சியைக் கண்டு, தேவியின் அருளையும் காளிதாஸனுடைய கவிதை யின் மேம்பாட்டையும் அறிந்தான். தேவியின் காதணி யாகிய சிறப்புற்ற அழகிய வெண்தாமரை மலரின் இதய கோசத்திலுள்ள இனிய, நறிய, தேன் துளி, தேவியின் கரம் தீண்டியதால் தூய்மையுற்று, தான் பாடிய கவிதை யின்மீது படிந்த பின்னரே தன்னுடைய கவிதை காளிதாஸ னுடைய கவிதைக்கு ஈடாயிற்று என்பதை அவன் உணர்ந்தான். மகா கவியாகிய காளிதாஸனையும் ரசிகத் தன்மையில் நிகரற்று விளங்கிய போஜனையும் மிகவும் பாராட்டிப் புகழ்ந்து வணங்கினான்.

# 2. கண்ணன் வென்றான்

மாட்சிமை தங்கிய மன்னர்க்கு மன்னனாகிய போஜன் தன்னுடைய அரசவை மன்றத்தில் அரியணை யின்மீது அமர்ந்து மிகவும் சிறப்பாகக் கொலு வீற்றிருந்தான்.

அப்பொழுது யாரோ ஒரு பெரும் புலவன், கண் இரண்டும் தெரியாதவன், தன் மனைவி தன் கையைப் பிடித்து வழிகாட்ட, உள்ளே வந்து, அரசன் இருந்த திசையை நோக்கி, 'உனக்கு மங்களம் உண்டாகுக' என்று வாழ்த்தினான். பிறகு, தான் அமைத்துக்கொண்டு வந்திருந்த ஒரு கவிதையைச் சொன்னான். அதன் பொருள் வருமாறு:

'தன்னை வந்தடைந்த கவிகளுக்குத் தன்னுடைய யானைகள் அனைத்தையும் போஜன் வழங்கி விட்டான் என்று கேட்டாள் பார்வதி. உடனே அவளுடைய மனத்தில் கவலைபற்றியது. யானை முகத்தையுடைய தன்னுடைய புதல்வனைக் காப்பாற் றும்பொருட்டு அடிக்கடி அவள் அவனை அணைத்துக் கொள்கிறாள்.'

அக்கவி சொல்லிய கவிதையின் நற்சுவையை அறிந்த போஜன் அவனுக்குப் பரிசாக ஏழு யானைகளை அளித்தான்.

இதற்கிடையில், ஒரு கிழப் பார்ப்பனரும் அவருடைய மனைவியும் மகனும் மருமகளும் அடங்கிய புலவர் குடும்பம் ஒன்று போஜனைக் காணும்பொருட்டுச் சபையினுள்ளே வந்து, அரசன் முன்னே நின்றது. அவர்களைக் கண்ட போஜன், குடும்பத் தலைவரான கிழப் பார்ப்பனரைப் பார்த்து, "எடுத்த கருமத்தை முடித்தல்



வல்லவர்களுக்கு அவரவர்களின் இயற்கை திறமையைப் பொறுத்தது; அவரிடமுள்ள துணைக் கருவிகளைப் பொறுத்தது அன்று'' என்னும் அடியை சமசையாக அதாவது பொருள் பொருந்தப் பாடிமுடிக்க வேண்டிய செய்யுள் அடியாகச் சொன்னான்.

அதைக் கேட்டதும், வயது நிரம்பியவராயும், உலகப் பற்று அற்றவராயும், தவம் செய் நிலையையே மேலாகக் கருதுபவராயும், உள்ள அந்தக் கிழப் பார்ப்பனருடைய மனத்தில் சிற்சில உணர்ச்சிகள் கிளர்ந்து எழுந்தன. 'உடல் வலி பெரிதன்று; செல்வம் பெரிதன்று; அரச



போகமும் பெரிதன்று. இவை யாவற்றையும் பொருட் படுத்தாமல், யாவற்றுக்கும் மேலான மெய்ஞ்ஞானத்திலே கண்ணாக இருக்கும் தவத்தினருடைய திறமைதான் பெரிது. தக்கதுணை இன்றி, தக்க கருவிகள் இன்றி, அவர்கள் இயற்றும் அருஞ்செயல்கள் எத்தனை!' என்றெல்லாம் அவர் சிந்தித்தார். அவர் முன்னால் பழைய நூல்களில் படித்திருந்த அற்புத நிகழ்ச்சி ஒன்று அப்போது அவருடைய மனக் கண்ணின் முன்னே காட்சி அளித்தது. அக் காட்சியைக் கண்ட அவர், அதைப் பாவாக அமைத்து, அரசன் இட்ட சமசையைத் தம் முடைய கருத்துக்கு இணங்க நிரப்பினார், அவர் அப்போது சொல்லிய செய்யுளின் பொருள் வருமாறு:

'பிறப்பிட்மோ மண் குடம். சுற்றத்தாரோ காட்டு விலங்குகள். ஆடையோ மரவுரி. வாழ்க் கையோ வெறும் காட்டிடம். ஊணோ சத்தில்லாக் கிழங்கு முதலியன. குணங்கள் யாவையும் இத்தகை யவை. ஆயினும், அகத்தியர் என்பவர் நீர் நிறைந்த பெருங் கடல் முழுவதையும், தாமரையை ஒத்த தம்முடைய அங்கையின் சிறு குழிவில் அடக்கினார். ஆதலால் எடுத்த கருமத்தை முடித்தல் வல்லவர் களுக்கு அவரவர்களின் இயற்கைத் திறமையைப் பொறுத்தது. அவரிடமுள்ள துணைக் கருவிகளைப் பொறுத்தது அன்று.

இதைக் கேட்ட அரசன் விலையுயர்ந்த பதினாறு மணிகளை அவருக்கு அளித்தான். அவை மிகவும் ஒளி பொருந்தியவை. பிறகு, அவருடைய மனைவியை நோக்கி, அரசன், 'அம்மா, நீரும் ஏதாவது சொல்லும்' என்றான்.

நாள்தோறும் அதிகாலையில் எழுந்து, நீராடி, பிறகு பொன்னிறமாய் விளங்கும் அருணோதய வேளையில் சூரியனைக் கண்ணாரக் கண்டு வணங்கி, பகல் முழுதும், வான வெளியிடையே அத் தெய்வம் நிற்கும் இடங்களைக்

கொண்டு, தன் காரியங்களை நடத்தி; பிறகு மாலையில், சூரியன் மறையும் வேளையில் அத் தெய்வத்தைக் கும்பிட்டு, வீட்டிலுள்ள விளக்குகளை ஏற்றி, தன் வாழ்க்கையை நடத்திவரும் அம் முதியோளுடைய மனக் கண்ணின் முன்னே உள்ளவை, நிகழ்பவை ஆகிய அனைத்தைக் காண்பதாய் விளங்கும் சூரியதேவன் நாள்தோறும் இயற்றி வரும் அற்புதச் செயல் மிகத் தெளிவாகத் தோன்றிக் காட்சியளித்தது. ஆகையால், அப் பெருமாட்டி தான் கண்ட காட்சியைப் பின்வருமாறுள்ள ஒரு செய்யுளாக அமைத்துச் சொன்னாள்.

'ஏறிய தேருக்கு உருளை ஒன்றே. அதை இழுக்கும் குதிரையோ எழு. அவற்றின் கடிவாள வார்கள் யாவும் சீறும் பாம்புகள். செல்லும் வழியோ பிடிப்பற்றது; அடையாளமற்றது. தேர்ப் பாகனோ கால் முடமான நொண்டி. ஆயினும், எல்லையற்ற வான வெளியின் மறு கரையை, நாள்தோறும் மீண்டும்மீண்டும், தவருமல் அடைந்தே வருகிருன் சூரியதேவன். ஆதலால், எடுத்த கருமத்தை முடித்தல் வல்லவர்களுக்கு அவரவர்களின் இயற்கைத் திறமையைப் பொறுத்தது - அவரிடமுள்ள துணைக் கருவிகளைப் பொறுத்தது அன்று.'

அதைக் கேட்ட அரசன் மிக்க மகிழச்சி அடைந்தவனாய் பதினேழு யானைகளையும் ஏழு குதிரைகளையும் அவளுக்குப் பரிசாக அளித்தான். கிழப் பார்ப்பனர் சொல்லியதைக் காட்டிலும் அக் கிழவி சொல்லியது சுவை மிக்கது என்பது அரசனுடைய கருத்து.

அதன் பிறகு தம் முன் நின்ற பார்ப்பன இளைஞனைப் பார்த்து, "பார்ப்பனப் புதல்வ. நீரும் ஒன்று சொல்லும்" என்ருன் அரசன்.

இளம் பிராயத்தினனும் சிறிது காலத்துக்கு முன்பே மணம் முடித்து இல்வாழ்க்கை தொடங்கியவனுமான அப்

பார்ப்பன வாலிபனுடைய மனத்தில் வீரமும், ஆண்மையும், காதலும், தீமையை வேரோடு பிடுங்கி எறிய வேண்டும் என்ற கொள்கையும், நிரம்பியதான ஓர் அற்புதச் செயலின் நினைவு உண்டாயிற்று. அது அவனுடைய நெஞ்சை நிறைத்து, அவனுடைய மனக் கண்ணை முற்றும் கவர்ந்து, அவனுக்குக் காட்சியளித்தது. அக் காட்சியை அவன் ஒரு செய்யுளாக வெளியிட்டான். அதன் பொருள் வருமாறு:

> 'வென்று தீரவேண்டியதோ' இலங்கைப் பெருந் தீவு. கால் நடையாய்க் கடந்து செல்ல வேண்டியதோ நீர் நிறைப் பெருங் கடல். எதிரியோ பிரமனின் புதல்வனை புலஸ்தியனுடைய வமிசத்தில் தோன்றிய இராவணன். போர்க் களத்திலே படைத் துணைவரோ வெறும் குரங்குகள். தானோ தேர் முதலிய படை - ஊர்திகள் இல்லாத வெறும் காலாள்; சாக்காட்டுக்கு உட்பட்ட மனிதன். ஆயினும், இராமன், ஒருவனாக இராக்கத குலம் அனைத்தையும் கொன்று அழித்தான். ஆதலால், எடுத்த கருமத்தை முடித்தல் வல்லவர்களுக்கு அவரவர்களின் இயற்கைத் திறமையைப் பொறுத்தது; அவரிடமுள்ள துணைக் கருவிகளைப் பொறுத்தது அன்று.

இதைச் செவியுற்ற அரசன் பெருமகிழ்ச்சி அடைந்து, அப் பார்ப்பன இளைஞனுக்குப் பதினெட்டு மத யானைகளைப் பரிசிலாக அளித்தான். தாய் சொன்னதைக் காட்டிலும் மகன் சொல்லியது சிறந்தது என்பது அரசனுடைய குறிப்பு.

அதன் பிறகு, மென்மை மிக்கவளாயும், மனத்தைக் கவரும் அழகு உள்ளவளாயும், சிருங்கார ரசத்தைக் கொண்டு முற்றும் அமைந்து உருப்பெற்றாற் போன்ற வடிவத்தை உடையவளாயும், சம்பகக் கொடியைப் போல் துவள்பவளாயும் இலாவண்யம் விளங்கும் மெல்லிய உடலை

உடையவளாயும் இருந்த அந்தப் பார்ப்பன மகளைக் கண்ணுற்ற அரசன், 'ஆகா! மலர் மேல் வீற்றிருக்கும் கலைமகளே விளையாட்டுக்காக இவ் வடிவை ஏற்று வந்திருக்க வேண்டும். ஐயமே இல்லை' என்று எண்ணி, தன் மனத்தினுள்ளே அவளை வணங்கி, பின்பு அவளை நோக்கி, "தாயே நீரும் ஒரு நற்சொல் அருளி வாழ்த்த வேண்டும்" என்றான்.

அழகு மிக்கவளாயும், இளமை ததும்பும் வயதினளாயும், உள்ள அப் பார்ப்பன மகளின் மனம் முழுவதிலும் காதல் நிரம்பிக் குடிகொண் டிருந்தது. அந்தப் பிராயத்திலே கண்ணால் பார்ப்பவை எல்லாம் இன்பக் காட்சிகள்; காதால் கேட்பவை எல்லாம் இனிமை ஒலிகள். மனத்தில் எழுபவை எல்லாம் இன்பமும் களிப்பும் செறிந்த கனவுகள். ஆதலால் அப் பெண்ணின் மனத்திலே மிக மிக அற்புதமான காட்சி ஒன்று எப்பொழுதும் குடிகொண்டு, அதை விட்டு ஒரு கணமும் பிரியாமல், அங்கேயே தங்கிக் கிடந்தது. உலகம் முழுவதும் காதல் தெய்வத்தின் அடிமைகளாக இருப்பதையே அவளுடைய மனம் அவளுக்கு அறிவித்தது. அவளுடைய கண்களும் அதையே கண்டன. அந்த இன்பக் கனவானது அவளுடைய மென்மை மிக்க உதடுகளினின்று, மிகவும் சுவைமிக்க பாவாக வெளி வந்தது. அதன் பொருள் வருமாறு:

'தன்னுடைய வில்லோ பூவினால் அமைந்தது. அவ்வில்லின் நாணோ தேன் இயற்றும் வண்டுகளால் தொடுத்தது. அதன் அம்போ இடைவிடாமல் அசைந்துகொண்டே இருக்கும் பெண்களின் கடைவிழியின் கோணற் குறு நோக்கு. தன்னுடைய தோழனோ சிறிதும் உணர்ச்சியில்லாதவனும், இதமற்ற பனிக்கதிர்களை வீசுபவனும், உள்ள சந்திரன். தானோ ஒருவன்; உருவிலி. ஆயினும், உலகம் முழுவதையும் ஒரே கலக்காகக் கலக்கி, வெற்றி

கொள்கிருன் மன்மதன்; ஆதலால் எடுத்த கருமத்தை முடித்தல் வல்லவர்களுக்கு அவரவர் களின் இயற்கைத் திறமையைப் பொறுத்தது: அவரிடம் உள்ள துணைக் கருவிகளைப் பொறுத்தது அன்று.'

அதைக் கேட்ட அரசன், தன்னுடைய மனத்தில் தான் எண்ணியிருந்த கருத்தையே அவள் மிகவும் அழகாக வெளியிட்டதைக் கண்டு, பெருமகிழ்ச்சி அடைந்து, தன் னுடைய மனைவி, அரசி லீலாதேவி, அணிந்திருந்த அணி கலன்கள் அனைத்தையும் கொணர்ந்து, அவளுக்குக் கொடுத்தான். அவள் சொல்லிய பாட்டுக்கு அத்தனையும் ஈடாகா என்று எண்ணி, அளவற்ற பொன்னையும் முத்தையும் மணியையும் பவளத்தையும் அவளுக்கு அளித்துக் களிப்புற்றுன்.

அக்குடும்பத்தார் சொல்லிய பாட்டுகளுக்குள்ளே பார்ப்பன மகள் சொல்லிய பாட்டே சொல் நயத்தினுலும், கருத்தின் உயர்விஞலும், பாவின் அமைப்பிஞலும், மேம் பட்டது என்பது போஜனுடைய கருத்து. இந்த வரலாற்றின் அடிப்படையான குறிப்புக்கள், 'போஜப் பிரபந்தம்' என்னும் கற்பனை நூலிலே காணப்படுகின்றன. மேற்கூறிய வரலாற்றின் உண்மை எப்படியாவது இருக் கட்டும். ஐம்பது வருஷங்களுக்கு முன்ஞல் நடந்த ஓர் உண்மை நிகழ்ச்சியை இக்கதையில் கூறிய நிகழ்ச்சியோடு ஒரு சிறிது ஒப்பிடலாம்.

சிறந்த தேச பக்தரும், வழக்கறிஞரும், நீதிபதியும், உயர்ந்த மேதாவியும் சிறந்த கொடையாளியுமான, ஸ்ரீ வே. கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவர்கள் ஒரு சமயம் கடலூருக்குச் செல்ல நேர்ந்தது. அப்போது அவ் ஊரில் உள்ள தலைவர்கள் அவரைக் காண வந்தார்கள். அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்தும் அத்தகையவர்கள் பலர் வந்திருந்தார்கள். அச்சமயம் அங்குள்ளவர்களை ஐயரவர் களுக்கு அறிமுகம் செய்வித்துக்கொண் டிருந்த ஒருவர்,

அக்கூட்டத்தாரில் ஒருவரைச் சுட்டிக் காட்டி, 'இவர் திருவகேந்திபுரத்தில் இருப்பவர்; சிறந்த பண்டிதர்; அஷ்டாவதானி; சமசைகள் இட்டால் மிகவும் அழகாகவும் எளிதாகவும் நிரப்பிக் கவிபாட வல்லவர்' என்று அவரை அறிமுகம் செய்வித்தார். அதைக் கேட்டதும், கிருஷ்ண ஸ்வாமி ஐயரவர்கள் அவரைப் பார்த்து, "எடுத்த கருமத்தை முடித்தல் வல்லவர்களுக்கு அவரவர்களின் இயற்கைத் திறமையைப் பொறுத்தது. அவரிடம் உள்ள துணைக் கருவிகளைப் பொறுத்தது அன்று; எங்கே, இந்தச் சமசையைப் பூர்த்தி செய்யுங்கள் பார்க்கலாம்" என்றார்.

அந்த அஷ்டாவதானி ஸ்ரீ வேதாந்தாச்சாரியார் என்ற பெரியார்; பரம வைஷ்ணவர்; கண்ணபிரானுடைய செயல்களிலே ஈடுபட்டு, அவனையே எப்பொழுதும் சிந்தித்துக் காலம் கழிப்பவர்; தம்முடைய உடல், பொருள், ஆவி, என்னும் அனைத்தையும் கண்ணனுடையதாகவே கருதுபவர். கண்ணன் செய்ததாகக் கூறப்படும் அற்புதச் செயல்களிலே ஒன்று அப்போது அவருடைய கண்ணின் முன்னே வந்து நின்றது. அதை, ஒரு செய்யுளின் மூலமாக, அவர் வெளியிட்டார். அதன் பொருள் வருமாறு:

'ஊன்றிய தறிகள் இல்லை; நூற்றுக் கோத்த நூல்கள் இல்லை; முன் பின்னாக ஓடும் நூனாழி இல்லை. ஆயினும், கௌரவர்களின் சபை நடுவே, பாஞ்சாலி அழுதரற்ற, கணக்கில்லாத் துகிலாடைகளை இயற்றி அருளினன் கண்ணபிரான். ஆதலால், எடுத்த கருமத்தை முடித்தல் வல்லவர்களுக்கு அவரவர்களின் இயற்கைத் திறமையைப் பொறுத்தது. அவரிடம் உள்ள துணைக் கருவிகளைப் பொறுத்தது அன்று.'

இதைக் கேட்டதும், ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர் பெரு மகிழ்ச்சி அடைந்து, "போஜ மன்னனுடைய சபையிலே

பாடிய கவிகள் குறிப்பிட்ட செயல்களுள் ஒவ்வொன்றுக்கும் யாதாயினும் ஒரு துணையோ துணைக் கருவியோ இருந்தது. அவ்வகையான யாதொரு துணைக் கருவியும் இல்லாத, சிறந்த, உதாரணம் ஒன்றை நீங்கள் எடுத்துச் சொல்லியது மிகவும் நன்ருக இருக்கிறது'' என்று அவரைப் பெரிதும் பாராட்டினுர்.

# 3. யார் குற்றம்?

போஜன் ஒரு நாள் தன்னுடைய அவை மன்றத்தில் இடப்பட்டிருந்த மணிகள் இழைத்த அரியணையின்மீது அமர்ந்து கொலு வீற்றிருந்தான். அவனுடைய சிற்றரசர் களிற் பலர், மிகவும் விலையுயர்ந்த ஆடையணிகளை அணிந்துகொண்டு, மிகவும் ஒய்யாரமாக, தங்கள் தங்கள் இருக்கைகளில் அமர்ந்திருந்தார்கள். அரசனுடைய அவைக் களத்தைச் சேர்ந்த கவிகள் அனைவரும் சிறந்த சால்வைகளையும் அரசன் அளித்த அணிகலன்களையும் அணிந்து, சூழ இருந்தார்கள். அரசன் இவ்வாறு கொலு வீற்றிருக்கையில், அவனுடைய வாயிற் காப்போன் உள்ளே வந்து, 'ஐய, தென்னாட்டிலிருந்து வந்தவனும் ஒருவன். அவன் பெயர் மல்லிநாதன்; கவிஞனும். இடுப்பில் ஒரு முழத் துணியைத் தவிர வேறொன்றும் அவன்மேல் இல்லை. அவன் வாயிலில் காத்து நிற்கிறான்' என்றான்.

கவிதைத் திறமையைக் கொண்டே ஆட்களை மதிப் பிடும் அரசன் வந்தவனுடைய உடையைப்பற்றிச் சிறிதும் எண்ணம் கொள்ளாதவனாய், வாயில் காப்போனைப் பார்த்து, 'அவனை உள்ளே அழைத்துக்கொண்டு வா' என்றான்.

உள்ளே வந்த கவி அரசனைப் பார்த்து, "உனக்கு எல்லா மங்களங்களும் உண்டாகுக" என்று முறைப்படி வாழ்த்தினான். அரசன் அவனை வணங்கி, "உட்கார வேண்டும்" என்று சொல்லவே, அவனும் அங்கே போடப்பட் டிருந்த இருக்கையில் உட்கார்ந்தான். பிறகு அந்தக் கவி அரசனைப் பார்த்து:



'யானை சிறப்பது மதப்பொழிவால்;
வானம் சிறப்பது மழைமுகிலால்;
இரவு சிறப்பது நிறைமதியால்;
அரிவை சிறப்பது சீலமதால்;
குதிரை சிறப்பது விரைநடையால்;
மதிலுடை மாளிகை விழவுகளால்;
பதங்கள் சிறப்பது இலக்கணத்தால்;
நதங்கள் அன்னப் பறவைகளால்;
அவைகள் சிறப்பது அறிஞர்களால்;
நவையில் குலங்கள் ஓர் நன்மகனால்;
பீடுறும் உலகமும் சூரியனால்;
நாடு சிறப்பதும் உன்னாலே.'

என்று பொருள் படும் அழகிய பாட்டு ஒன்றைச் சொன்னான்.

பாட்டின் கருத்தும், அதன் ஓசை நயமும் மிகவும் நன்று யிருக்கக் கண்ட அரசன், அந்தக் கவியை மிகவும் பாராட்டினன். "ஐயா, தாங்கள் வெகு தூரத்துக்கு அப்பாலிருந்து வந்திருக்கிறீர்கள். தாங்கள் இங்கே வந்த நோக்கம் என்ன? தங்கள் மனத்திலுள்ள குறை யாது?" என்றான்.

அதைக் கேட்ட கவி அரசனைப் பார்த்து:

'சீறிடும் அன்னை; காரணந்தான்
சிறியேன் அல்லன்; மருகி அலன்
வீறிடும் மருகியும்; காரணந்தான்
வினையேன் அல்லன்; தாயும் அலள்.
ஏறிடும் கோபம் எனக்குந்தான்;
இவளால் அன்று அவளாலும் அன்று.
கூறுதி இதனை ஆராய்ந்தே;
குற்றம் யார்மேல் மன்னவனே?'

என்று பொருள்படும் பாடலைச் சொன்னான். பாடல் மிகவும் அழகாக அமைந்திருந்தது. கவி தன்னுடைய கருத்தை அநாகரிகமாக வெளியிடாமல், இங்கிதமாய், நாகரிகமாய், வெளியிட்ட நயத்தையும் அடக்கத்தையும் கண்டு, அரசன் மிகவும் மனம் உவந்தான். வறுமை நிலையானது குற்றமற்றவர்களைக் குற்றவாளிகளாக மாற்றும் விந்தையையும், அன்போடு பேசப்படும் சொற்களை காதைத் துளைக்கும் இரும்புச் சலாகைகளாக மாற்றும் வியப்பையும், ஊக்கமுள்ள மனங்களை உடைந்துபோகச் செய்வதையும். உலக வாழ்க்கையை மிகவும் நன்றாகத் தெரிந்த அரசன் பலமுறை பார்த்திருந்தான். ஆதலால் அன்பு நிறைந்த ஒரு குடும்பத்தில், காரணமின்றி, ஒவ்வொருவரும் மற்றொருவரையும் கண்டு மனக் கசப்பு அடைந்து, கோபம் கொள்வது வறுமையின் குற்றத்தினால் தான் என்பதை எளிதில் அறிந்துகொண்டான். மல்லிநாத கவிக்கு அளவிறந்த செல்வத்தை அளித்து, அவனை மனம் குளிரச் செய்தான். அவனும் அரச சபையில் வெகுகாலம் இனிமையாக வாழ்ந்தான்.

# 4. முழங்கால் நனையா ஆழம்

போஜன் ஆட்சி புரிந்த நாளிலே அவனுடைய சிறந்த தலைநகரில் ஓர் ஏழைப் பிராமணன் வாழ்ந்து வந்தான். அவனுடைய வீட்டில் ஒரு பண்டிகை வந்தது. தீபாவளிப் பண்டிகை என்றே வைத்துக்கொள்ளலாம். அப்போது அவனுடைய மனைவி தங்களுடைய வறுமை நிலையை அவனுக்கு நினைவுமூட்டினாள். "வீட்டில் ஒன்றுமே இல்லையே. பண்டிகைக்கு ஏதாவது வேண்டாமா?" என்றாள்.

'நான் என்ன செய்வேன்? வேதம் படித்தேன். அதற்கு மதிப்பில்லை. கவிதைக்குத்தான் இந்த ஊரில் மதிப்பு இருக்கிறது; கவிதையோ எனக்கு வரமாட்டேன் என்கிறது; அதற்கு அருள்வாக்கு வேண்டும். வேறு என்ன செய்வது என்று எனக்குத் தெரியவில்லை. விறகு வெட்டியாவது பிழைக்கலாமா என்று பார்க்கிறேன்' என்று மிகவும் மனக் கசப்போடு சொன்னான். இருவருமாகச் சிறிதுநேரம் மிக்க வருத்தத்தோடு பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு, அன்று ஒரு நாளாவது காட்டில் விறகை வெட்டித்தான் பார்க்கலாமே, எவ்விதமான உடலுழைப்பும் இழிமை தருவது அன்று, என்று அவன் தன் மனத்தை உறுதி செய்துகொண்டான்.

அந்தப்படி அவன் நகருக்கு அடுத்தாற்போலுள்ள ஆற்றைக் கடந்து, அதற்கும் அப்புறத்தேயுள்ள காட்டை அடைந்து, அங்கு விறகை வெட்டினான். மாலை வேளையில் விறகைத் தலைச் சுமையாய்ச் சுமந்துகொண்டு, அவ் ஆற்றைக் கடந்து வந்துகொண் டிருந்தான்.

அந்தச் சமயத்தில், போஜ மன்னன், தன் ஏவலாள் ஒருவனோடு, ஆற்றோரமாக உலாவி வந்துகொண் டிருந்



தான். விறகைத் தூக்கி வருபவனை அவ்அரசன் வியப் போடு பார்த்தான். 'இவனுடைய தோற்றத்தைப் பார்த் தால் பிராமணனைப்போல் இருக்கிறது, இவன் தலையிலோ விறகுக் கட்டு; இடையில் அரிவாள்; இவன் செய்யும் செயல் வெறும் விறகு வெட்டியின் காரியமாக இருக் கிறது. இது ஏன்? இவன் படித்தவனா? மூடனா? என்று யோசித்தான். 'இவனோடு பேசிப் பார்த்தால் தெரிந்து விடும்' என்று எண்ணி, அவனைப்பார்த்து:

''நுதல்வியர் நிலத்தில் வீழ,
நுடங்கியே நடந்து மெல்லப்,
புதல் விறகு எடுத்துக் கட்டி,
பொறுக்கொணா வருத்தத்தோடும்,
ஆற்றினைக் கடந்து வந்தீர்,
ஆற்றுநீர் ஆழம் என்ன?
தோற்றிடும் ஆழம் தானா?
தோள்வரை ஆழம் உண்டா?''

என்று கேட்டான். உடனே அந்தப் பிராமணன் தன்னை இவ்வாறு கேட்பவன் அரசன் என்று தெரிந்துகொண்டு,

''தோன்றிடும் ஆழம் தேறேன்;
தோள்நனே ஆழம் இல்லே.
மூன்று உலகு ஆளும் வேந்தே,
முழங்காலும் நனேயா ஆழம்''

என்று விடை கூறினன்.

இதைக் கேட்ட அரசன், 'இவனே அறிவிலி என்று நினேத்தோமே. இவன் ஏதோ கவி சொல்லுகிருனே' என்று நினேத்து, மறுபடியும்:

''வேடத்தைப் பார்த்தால், ஐயா,
விப்பிரர்போல் தோன்றுகின்றீர்;
மூடத்தைப் போல் ஏன் தலேயில்
மூட்டையை நீர் தூக்கிவந்தீர்?''

என்று கேட்டான். அதற்கு அந்தப் பிராமணன்:

''பொல்லாத சுமையைத் தூக்கப்
புகுந்தது நீர் ஏனே?' என்றீர்'
எல்லாரும் உம்மைப்போல
இருப்பாரோ இவ்உலகின்மீதில்?''

என்று சொன்ஞன். அரசன் மிகவும் மகிழ்ச்சியுற்று, அவனேப் பார்த்து, ''ஐயா, உங்களுடைய கவிதைத் திறன் மிகவும் சிறந்ததாயிருக்கிறது. நீங்கள் நம்முடைய அரசாங்கக் கருவூலப் பொருளாளரிடம் சென்று, நூருயிரம் பொன் வாங்கிக் கொள்ளுங்கள். நான் சொன்னேன் என்று சொன்ஞல், அவர் கொடுத்துவிடுவார்'' என்ருன்.

இதைக் கேட்டதும், அந்தப் பிராமணன், அடங்காத மகிழ்ச்சி அடைந்து, தான் உடல் நொந்து சுமந்து வந்த விறகுக் கட்டை அப்படியே தொப்பென்று எறிந்துவிட்டு, மிகவும் ஆவலோடு அரசனுடைய கருவூலத்தை அடைந்து, அங்குள்ள அலுவலரிடம் சென்று, ''ஐயா, அரசன் என்னே அனுப்பி வைத்தான். உம்மிடம் கேட்டு நூருயிரம் பொன் வாங்கிக் கொள்ளச் சொன்ஞன். கொடுங்கள், ஐயா'' என்ருன்.

அவன் சொல்லியதைக் கேட்ட கருவூல அலுவலர் அவனை ஏற இறங்கப் பார்த்தார். "அரசன் கவிகளுக் கன்றி மற்றவர்களுக்கு வரையறையில்லாது கொடுப் பவன் அல்லன். உம்முடைய முகத்தையும் உம்முடைய தோற்றத்தையும் பார்த்தால், உமக்கு யார் ஐயா நூறுயிரம் பொன்னைக் கொடுப்பார்கள்? போம். போம்'' என்று சிரித்து கேலி செய்து, துரத்தி விட்டான்.

அந்தப் பிராமணன் மிகவும் வருத்தம் அடைந்து, அரசன் அளித்தும் கருவூல அலுவலர் அளிக்கவில்லையே என்று மனமுடைந்து, அரசனைத் தேடிச் சென்றான். அரசனைக் கண்டதும், மிகவும் ஆத்திரத்தோடு, "ஐயா, உம்முடைய கருவூல அலுவலர் என்னைப் பார்த்து மிகவும் இகழ்ச்சியாகச் சிரித்துக்கொண்டே இருக்கிறார். நான் எத்தனையோ தரம் கேட்டுப் பார்த்தேன். பொன் தர மாட்டேன் என்று மறுத்து விட்டார்'' என்று சொன்னான்.

அரசன் அதைக் கேட்டதும், "அப்படியா செய்தான் அவன்? மறுபடியும் போங்கள். நான் சொன்னேன் என்று சொல்லி, இரண்டு லட்சம் பொன் வாங்கிக் கொள்ளுங்கள். இந்தத் தடவை கொடுப்பான்'' என்றான்.

மறுபடியும், பிராமணன் கருவூல அலுவலரிடம் சென்றான்: 'எனக்கு இரண்டு லட்சம் பொன் கொடுக்க வேண்டும் என்பது அரசனுடைய உத்தரவு'' என்றான். கருவூல அலுவலருக்கு அவனைக் கண்டவுடனேயே சிரிப்புத் தாங்க முடியவில்லை. ஆகவே, அவன் இவ்வாறு சொல்லியதைக் கேட்டதும், விழுந்து விழுந்து சிரிக்கத் தொடங்கி விட்டான். "போம், ஐயா, போம். உமக்கு வேலை இல்லையா?'' என்றான்.

மீண்டும் தோல்வியுற்ற பிராமணன், முன்னிலும் மிக மனம் வருந்தி, அரசனிடம் திரும்ப வந்தான். "ஐயா,

அந்தப் பெரும் பாவி என்னைப் பார்த்துச் சிரிக்கிறானே தவிர, ஒன்றும் கொடுக்க வில்லை'' என்று துயரத்தோடு தெரிவித்தான்.

கோடிக் கணக்கான செல்வத்தை உடையவனும், உலகம் முழுவதையும் ஆள்பவனும், உள்ள போஜ மன்னனுக்கு இது ஒரு வேடிக்கையாகவே பட்டது. எப்பொழுதுமே அவன் விநோதங்களில் பிரியம் உடையவன். ஆகையால், அவன் மீண்டும் பிரா மணனைப் பார்த்து, ''இரண்டு லட்சம் பொன் கொடுக்க மாட்டேன் என்றால், 'மூன்று லட்சம் கொடு' என்று கேளுங்கள்; அவன் கட்டாயமாகக் கொடுப்பான்'' என்றான்.

மீண்டும் ஒரு முறை, பிராமணன் ஆவலோடு அரண்மனைக்குச் சென்றான். அரசனுடைய கருவூலத்தை அடைந்து, 'ஐயா, இரண்டு லட்சம் கொடுக்கமாட்டீர் என்றால், மூன்று லட்சம் கொடுக்கவேண்டும் என்பது அரசனுடைய கட்டளை' என்று சொன்னான். அதைக் கேட்ட கருவூல அலுவலர் முன்னிலும் அதிகமாகச் சிரித்துவிட்டு, ''ஒன்றும் கொடுக்கமாட்டேன்'' என்று அவனைத் துரத்தி விட்டான்.

பிராமணனுக்கு இருந்த வருத்தம் முழுவதும் கோபமாக மாறி விட்டது. அவன் அரசனிடம் சென்று, ''ஐயா, என்ன சொன்னாலும், அவன் கொடுக்கவே மாட்டேன் என்று மறுத்து விட்டான். என்னை மீண்டும் மீண்டும் அங்கே அனுப்புகிறீர்களே? எனக்கு யாதொரு பயனும் இல்லையே?

''புவியின் மீதெங்கும் மன்னா,
பொன் மழை பொழிகின்றாய் நீ
கவிகளைச் செய்தோர் எல்லாம்
கனகத்தில் மூழ்கி யுள்ளார்.

பொன்மழை தாரையாகப்
பொழியினும், என்மீது ஐயா,
சின்னதோர் திவலை கூடச்
சிதறியும் தெறிக்க ஒட்டாக்
கவிகுடை போல, என்னைக்
காக்கும் என் கெட்டகாலம்
புவியினில் என்போல் யாரே,
பூதலத்து உள்ளார், வேந்தே?''

என்று அரசனைப் பார்த்துச் சொன்னதும், அரசனுக்கு ஒரு புறம் சிரிப்பும், ஒருபுறம் வருத்தமும், உண்டாயின. மறுபடியும், அவ் அரசன் முன்னிலையில் ஓரளவு கவிபாடும் திறமைபெற்ற அந்த பார்ப்பனப் போலிக் கவி அரசனைப் பார்த்து:

''மேகம்போல் பொழிகின்ருய் நீ;
விருட்சங்கள் துளிர்த்த யாவும்;
ஏகமாய் இலைகள் எல்லாம்
எருக்கினின்(று) உதிர்ந்த இன்றே.''

என்று மறுபடியும் கவி சொல்லவும், அரசன் அவனைப் பார்த்து, ''ஐயா, கோபிக்க வேண்டாம். அவன் ஏதோ தவறு செய்துவிட்டான். மூன்று லட்சம் பொன்னையும், பத்து யானைகளையும், நான் கொடுக்கச் சொன்னேன் என்று கேட்டு வாங்கிக்கொள்ளும்'' என்று சொல்லி, தன்னுடைய மெய்காப்பாளனையும் கூட அனுப்பினுன்.

கருவூலப் பேரலுவலர் அரசன் ஆணைப்படி அவற்றைத் கொடுத்து விட்டு, கணக்கோலையில்,

---

* இச்செய்யுளைப் பல பட்டடைச் சொக்கநாதப் புலவர் வருமாறு மொழி பெயர்த்திருக்கிருர்

'போசநீ யோர்புயலாப் பூமுழுதும்பொன்மாரி
வீசுவா யங்கதிலோர் விந்தேனும் - பேசுமென்மேல்
பட்டதில்லை என்வறுமை பாரக் குடையாகி
முட்டக் கவித்திடுத லால்'

'முழங்கால் நனையா ஆழம்எனும்
மொழியால் அரசன் மயங்கிப்போய்,
வழங்கா நின்றான் மூன்று லட்சம்
மதிப்புள பொன்னும், யானைகளும்'

என்று பதிவு செய்துகொண்டான்.

கவிதைச் சுவை நன்றாகத் தெரிந்தவர்கள் இக்காலத்திலும் கூட இவ்வாறு, சிற்சில வேளைகளில், போலிக் கவிதைகளைத் தவறாக மதிப்பிடுவதை நாம் யாவரும் பார்த்திருக்கிறோம், அல்லவா?

# 5. வீண் பெருமை கொள்ளாதே கடலே

இடம்: தென் நாட்டின் வட எல்லைப் புறத்தில் உள்ள ஓர் அரசின் தலைநகரின் அரசவைப் பெருமன்றம்.

*காலம்:* சில நூற்றாண்டுகளுக்கு முன்; ஒரு நாள் காலை வேளை.

அரசருடைய பெருமன்றத்திலே பல நாட்டுப் பெரும் புலவர்களும் கவிகளும் அமைச்சர்கள் பிரதானிகள் முதலிய அரசாங்க உயர் அலுவலர்களும் தங்கள் தங்கள் இருக்கைகளில் அமர்ந்திருக்கிறார்கள். உயரமான பீடத்தின்மீது அமைந்திருப்பதாயும், இரத்தினங்களால் இழைத்துத் தகதகவென்று மின்னிக்கொண் டிருப்பதாயும், பொன்னால் செய்ததுமான அரியணையின்மீது அரசர் விற்றிருக்கிறார். புதிதாக அரச சபைக்கு வந்த புலவர் களின் முகத்திலே ஒரு பரபரப்புத் தென்படுகிறது. அவர் களுடைய மனத்திலே அச்சமும் ஆவலும் மாறி மாறித் தோன்றிக்கொண்டே யிருக்கின்றன. அரசரோடு நெடு நாளாகப் பழகியதால், அச்சம் தவிர்ந்த சில புலவர் களும் அமைச்சர்களும் சுற்றிலுமுள்ள பரபரப்பைக் கவனியாமல், வழக்கம்போல் மெல்லப் பேசிக்கொண் டிருக்கிறார்கள்.

*அமைச்சர்:* ஐயா, கோவிந்த கவி, அன்று நீங்கள் பாடிய பாட்டு நன்றாயிருந்தது.

*கோவிந்த கவி:* அப்படியா? வெகு சந்தோஷம்.

*சேனாதிபதி:* என்னுடைய காதுக்கும் அந்தப் பாட்டு நன்றாகத்தான் இருந்தது. ஆனால்......

*கோவிந்த கவி:* ஆனால் என்ன? அந்தப் பாட்டின் கருத்து உங்களுக்குப் பிடிக்கவில்லையோ?

*சேனாதிபதி:* பாட்டின் ஓசை நன்றாக இருந்தது. உங்களுடைய குரலும் நன்றாக இருந்தது. ஒரே பொருளைக் குறிப்பதற்குக் கடினமான பல சொற்களைத் திரட்டி, ஒரே பாட்டில் புகுத்திவிட்டீர். அந்தச் சொற்களை நாம் சாதாரணமாக வழங்குவதே இல்லை. வழங்கவேண்டிய அவசியமும் இல்லை. பாட்டில் மட்டும் அவற்றை வழங்கு வானேன்?

*கோவிந்த கவி:* எதுகை மோனைகளுக்காகவும், சந்தம் முதலியவற்றுக்காகவும், ஓசைப் பொருத்த முள்ள சொற்களை சில வேளைகளில், தேடி அமைக்கவேண்டி யிருக்கிறது. பாட்டில் வரும் சொற்களெல்லாம் எளிய சொற்களாயிருந்தால், பாட்டு மட்ட வகையாக ஆகி விடாதா?

*சேனாதிபதி:* எல்லாச் சொற்களும் அருஞ்சொற் களாயிருந்தால், பாட்டு ஒருவருக்கும் விளங்காமல் போய்விடுமே. ஒரே பொருளைக் குறிப்பதற்குப் பல சொற்கள் எதற்கு? உதாரணமாக, கடலுக்கு நாற்பது ஐம்பது பெயர்கள் எதற்கு? அத்தனை பெயர்கள் அதற்கு வேண்டாம் என்று எனக்குத் தோன்றுகிறது.

*அரசர்:* நம்முடைய ஆஸ்தான கவி இதைப் பற்றி என்ன சொல்லுகிறார்?

*வாணிதாசர்:* ஒரே பொருளைக் குறிப்பதற்குப் பல சொற்களை உபயோகித்தால், அதனால் பொருள் அத்தனை தெளிவாக இராது; உண்மைதான். ஆயினும் பலவகை ஓசையோடு கூடிய சொற்கள் இருந்தால்தான் பாட்டை அமைப்பது எளிதாக இருக்கும். ஓசையும் இனிமையுள்ளதாக இருக்கும்.



*அரசர்:* பாட்டை அமைப்பதற்காகவும், பாட்டின் ஓசைக்காகவுந்தான், சொற்களா? அதன் பொருளுக்காக அல்லவா?

*வாணிதாசர்:* திறமையும் கவிதைத் திறமையும் இருந்தால், எந்தச் சொற்களேயும் வைத்துக்கொண்டு, பொருளும் பொருந்தும்படி பாடிவிடலாம்.

*அரசர்:* கடலுக்கு இத்தனே பெயர்கள் எதற்கு என்று நம்முடைய சேனுதிபதி பேசினுர்களே. கடலின் பெயர்கள் சிலவற்றை ஒரே பாட்டில், ஒரே அடியில், வரிசையாக அடுக்கி வைத்து, அவற்ருேடு பாட்டின் பொருளும் பொருந்தும்படி அமைத்துப் பாடுவீர்களா?

*வாணிதாசர்:* அதற்கென்ன? பாடுகிறேன். இந்தச் சபையிலே எத்தனேயோ புலவர்களும் கவிகளும் இருக்கிருர்கள். நீங்கள் உத்தரவிட்டால், ஒரு பாட்டு

மட்டும் அன்று; பல பாட்டுக்களை வேண்டுமானாலும் இன்றே கேட்கலாம். நான் அடி எடுத்துக் கொடுக்கிறேன்.

*அரசர்:* அதைத்தான் பரீட்சை செய்துவிடலாமே. நாலைந்து பாட்டுக்கள் போதும். அதிகம் வேண்டாம். வாணிதாசரே, நீங்களே கடைசி அடியை அமைத்துக் கொடுங்கள்.

*வாணிதாசர்:* (சற்று ஆலோசனை செய்து) இதோ ஓர் அடியைக் கூறுகிறேன். அதிலே கடலின் பெயர்களுள் ஆறு பெயர்களை அமைத்திருக்கிறேன். இந்த அடியைக் கடைசி அடியாக வைத்துக்கொண்டு, இங்குள்ள புலவர்கள் எளிதில் பாட்டுக்களை அமைத்து விடுவார்கள்.

*அரசர்:* எங்கே, அந்த அடியைச் சொல்லுங்கள் கேட்போம்.

*வாணிதாசர்:* இதோ சொல்லுகிறேன்; கேளுங்கள்:

*பாதோதிர்; ஜலதி; பயோதிர்; உததிர்; வாராந்நிதிர்; வாரிதி;*

*அரசர்:* வாணிதாசரே, மிகவும் கம்பீரமான ஓசையை உடைய அடி ஒன்றிலே கடலின் பெயர்கள் ஆறு வரும்படி பாடிவிட்டீர்களே. இதனோடு ஒட்டும்படி பாட்டைப் பாடுவது எப்படி?

*வாணிதாசர்:* சற்று நேரம் பொறுத்தால், நமது கவிகள் பாடிவிடுவார்கள்.

*அரசர்:* அப்படியே செய்வதுதான் நல்லது. எனக்கும் அதுவே சௌகரியமாயிருக்கும். இன்னும் இரண்டு, மூன்று, நாழிகை நேரம் அரசியல் அலுவல்களை நான் கவனிக்க வேண்டியிருக்கிறது. அதற்குப் பிறகு, இந்தக் கவிதைத்துறை ஆராய்ச்சியை மீண்டும் பார்ப்

போம். பாட்டுக்களை இயற்றுவதற்கும் அதற்குள் போதிய நேரம் உங்களுக்கும் இருக்கும்.

*புலவர்கள்:* அப்படியே.

❋

[*அதே இடமும், காலமும்:* மூன்று நாழிகைக்குப் பின்]

*அரசர்:* என்ன, வாணிதாசரே, பாட்டு இயற்றியாகி விட்டதா?

*வாணிதாசர்:* நான் இயற்றியாகிவிட்டது, மற்றவர் களும் இயற்றியிருப்பார்கள்.

*அரசர்:* அப்படியானால், பாட்டையும் சொல்லி, அதன் பொருளையும், எல்லோருக்கும் விளங்கும்படி, தெளிவாகச் சொல்லிவிட வேண்டும். நீங்கள் தொடங்கு கிறீர்களா? அல்லது......

*வாணிதாசர்:* மற்றவர்கள் முதலில் சொல்லட்டும். நான் கடைசியில் சொல்லுகிறேன். இன்று புதிதாக நமது சபைக்கு வந்துள்ள சிலரை சொல்லச் சொல்ல லாமே. குமாரகவி, நீங்கள் தொடங்குங்கள்.

*குமாரகவி:* வாணிதாசர் கடலுக்குரிய ஆறு பெயர் களைப் பொறுக்கி, பாட்டின் இறுதி அடியாக அமைத்த பொழுது, என் கண் முன்னே என்னுடைய வழிபாட்டுத் தெய்வமாகிய முருகக் கடவுளின் ஆறு முகங்களையுடைய திருவுருவமே தோன்றிற்று. அவரைக் குறித்து மனத்தில் சிந்தித்தேன். அவருடைய ஆறு முகங்களும் வாணிதாசர் கூறிய கடலின் ஆறு பெயர்களையும் கூறுவதாகக் கற்பனை செய்யலாம் என்று எண்ணினேன். ஏற்ற நிகழ்ச்சி, வாய்ப்பு, ஒன்று வேண்டுமே. சற்று ஆலோசனை செய்தேன். என் மனத்தில் ஒரு கற்பனை பிறந்தது. அதைக் கவியாக அமைத்தேன். இதோ சொல்லுகிறேன். பொருளையும் கூறுகிறேன். குற்றங்களை மன்னிக்க வேண்டும்.

ஆறுமுகக் கடவுளின் தந்தையாராகிய சிவ பெருமான் கங்கை என்னும் பெண் ஒருத்தியைத் தம் முடி மேல் வைத்துப் பாராட்டிவருகிறார் என்பதைக் குறித்து, முருகனுக்கும், உலகம் அனைத்துக்குமே, தாயாகிய உமை பலகாலும் குமுறிக்கொண்டே யிருந்தாள். அவள் கோப மாய்க் கூறிய மொழிகள் ஆறுமுகக் கடவுளின் செவிகள் அனைத்திலும் பலமுறை புகுந்து, அவரைத் துன்புறுத்திக் கொண்டே யிருந்தன. ஆதலால், அவர் தம்முடைய தாயின் மனநிலைக்கு இரங்கி, சிவபெருமானிடம் சென்று, 'அப்பா, அம்மா கோபிக்கிறார். உங்களுடைய திருமுடி மேல் வைத்து நீங்கள் தாங்கிக்கொண் டிருக்கும் இந்தக் கங்கையை விட்டுவிடுங்கள்' என்று மன்றாடினார். அதைக் கேட்ட சிவபெருமான், 'அப்பா குழந்தாய், நீ எல்லாம் தெரிந்த ஞானபண்டிதனாயிற்றே. நீயும் இப்படிப் பேசலாமா? இவள், மிக மிக நீண்ட காலமாக, என்னிடமே இருந்து வந்திருக்கிறாளே. இவளை நான் எப்படிக் கைவிடுவேன்? நான் கைவிட்டால், இவளுக்குப் புகலிடம் எங்கே?' என்று கேட்டார். உடனே, எங்கள் தெய்வமாகிய அறுமுகக் கடவுளுக்குத் தாங்க முடியாத கோபம் வந்துவிட்டது. கோபாவேசத்தில் அவருடைய முகத்திலுள்ள கண்கள் மின்னின. அவருடைய நாவுகள் அனைத்தும் படபடத் தன. ஆதலால் கங்கைக்குப் புகலிடம் எங்கே என்று கேட்ட சிவபெருமானுக்கு ஆறு முகங்களும் ஒன்றுபோல விடையளித்தன. 'பாதோதி' என்றது ஒரு முகம்; 'ஜலதி' என்றது மற்றொன்று; 'பயோதி' என்றது மூன்றாவது முகம்; 'உததி' என்றது நான்காவது முகம்; 'வராங்நிதி' என்றது ஐந்தாவது முகம்; 'வாரிதி' என்றது ஆறாவது முகம். இவ்வாறு அத்தனை முகங்களுமாகச் சேர்ந்து, 'கங்கை இங்கே இருப்பானேன்? அவள் கடலில் போய் விழட்டுமே' என்று பொருள்பட, இவ்வாறு கூறின.

*அரசர்:* மக்களிடம் காணப்படும் சிறுமைகளைத் தெய்வங்களின் மீதும் சுமத்துவது எனக்கு அவ்வளவு உடன்பாடன்று. ஆயினும், கற்பனை நன்றாயிருக்கிறது; வேடிக்கையாகவும் இருக்கிறது. கடலின் ஆறு பெயர்களும் பாட்டில் அழகாகப் பொருந்தியிருக்கின்றன.

*வாணிதாசர்:* ஐயா, இராமநாத கவி, நீங்கள் ஏதாவது சொல்லுங்கள். குமாரகவி தம் பெயருக்கு ஏற்பக் குமரக் கடவுளைப் பற்றிப் பாடிவிட்டார். நீங்களும் உங்கள் பெயருக்கு ஏற்ப, இராமனைப் பற்றிப் பாடப் போகிறீர்களா?

*இராமநாத கவி:* கடலின் பெயர் வரிசையைக் கேட்டதும், எனக்கு எங்கள் ஊரின் பக்கத்திலுள்ள கடலும், அது அலைமோதிக் கொந்தளிக்கும் ஓசையும், அதில் கட்டியதாகக் கூறப்படும் அணையுமே, நினைவுக்கு வந்தன. அது இராமன் கட்டிய அணை; இராவணனை அழிக்க உதவிய அணை. அந்த அணை கட்டப்பட்டது என்று இராவணன் கேள்வியுற்றபோது, அவன் என்ன பாடு பட்டிருப்பான்? அவன் மனமானது அலையும் கடலைக் காட்டிலும் அதிகமாகக் குழப்பம் அடைந்திருக்கும் அல்லவா? என்று எண்ணினேன். அப்போது என் மனக்கண்ணின் முன்னே ஒரு காட்சி தென்பட்டது. அதைப் பாட்டாக அமைத்தேன். அந்தப் பாட்டை இதோ சொல்லுகிறேன்; பின்பு விளக்குகிறேன்; கேளுங்கள்:

அருந் தவம் செய்து, பேராற்றல் பெற்ற, இராவணன் உலகம் மூன்றையும் வென்று, இறுமாப்படைந்தான். அவன் ஒரு நாள், இரவு வேளையில், மிக்க விருப்பத்தோடு இனிய கள்ளை ஒரு வாயால் குடித்துக்கொண் டிருந்தான். நிலவு மிகவும் அழகாகப் பொழிந்துகொண் டிருந்தது. ஆதலால், அந்த முழு நிலவின் அழகை மற்றொரு முகத்திலுள்ள கண்களால் அவன் பருகிக்கொண்

டிருந்தான். மற்றும் ஒரு முகமானது தன் அருகிலிருந்த அருமைக் காதலியின் முகத்தின் அழகிலே ஈடுபட்டு, அந்தத் தாமரை முகத்தின் அழகைப் பருகிய வண்ணமா யிருந்தது. இன்னொரு முகம் செவிகளாரப் பாட்டின் இன்னிசை அமுதத்தைப் பருகிக்கொண் டிருந்தது. அவன் சிற்றின்ப சுகங்களை இவ்வாறு நான்கு முகங்களால் அனுபவித்துக்கொண் டிருக்கும் வேளையில் அவனுடைய ஒற்றர்கள் ஓடிவந்து, 'எதிரிகள் இதில் அணை கட்டிவிட்டார்கள்' என்றார்கள். அவர்களுக்கு இருந்த பரபரப்பினாலும், அச்சத்தினாலும் அணைகட்டப்பட்டது எதில் என்று அவர்கள் குறிப்பிட வில்லை. 'கடல்' என்ற பெயரை அவர்கள் சொல்ல மறந்துவிட்டார்கள். அவர்கள் சொல்லைக் கேட்ட இராவணன் அச்சம் மேலிட, தலை கிறு கிறுவென்று சுழன்றிட, பரபரப்போடு, 'அணை கட்டப்பட்டது எதில்? கடலிலா?' என்று கேட்க நினைத்தான். உடனே அவனுடைய பத்துத் தலைகளுள் மேலே சொல்லியவாறு சிற்றின்ப சுகங்களில் ஈடுபட்டிருந்த நான்கு தலைகள் நீங்கலாக, எஞ்சிய தலைகள் ஆறும், மிகவும் பரபரப்பாக பெருங்கடலை ஆறுவகையாய்க் குறிப்பிட்டன. ஒவ்வொரு முகமும் கடலின் பெயர் ஒன்றைக் கூறியது. ஒருமுகம் பாதோதி என்றது; மற்றவை முறையே ஜலதி, பயோதி, உததி, வாராந்நிதி, வாரிதி, என்றன.

*அரசர்:* பாட்டு அவ்வளவு மோசமில்லை. கருத்தையும் பொருந்தும்படி அமைத்துவிட்டீர்கள். ஆனால் இராவணனுக்குப் பத்துத் தலை இருக்க, அவற்றுள் நான்கு தலைகளைக் கழித்துவிட்டு, ஆறு தலைகளை மட்டும் குறிப்பிட்டீர்களே.

*வாணிதாசர்:* நான் ஆறு பெயர்களையே கூறினேன். ஆகையால், இந்த மாதிரி பாடியிருக்கிறார். வேறு யாராவது ஒருவர் பத்துத் தலைகளையும் பேச வைத்திருப்பார் என்பது உறுதி. என்ன, மதுரகவி?

*மதுரகவி:* நான் அப்படித்தான் செய்திருக்கிறேன். பெயர்களின் படபடப்பான ஓசையைக் கேட்டதும், படபடத்த குணமுள்ள இராவணனுடைய நினைவே எனக்கும் வந்தது. இராமநாதகவி கொண்ட கருத்தை ஒத்த கருத்தை வைத்துக்கொண்டுதான் நானும் பாடியிருக்கிறேன். நான் பாடிய பாட்டைச் சொல்கிறேன், பொருளையும் குறிப்பிடுகிறேன்; கேளுங்கள்:

பத்து முடிகள் கொண்ட இராவணனுடைய காதுகளில், எதிரிகள் கடலில் அணையைக் கட்டிவிட்டார்கள் என்ற செய்தி விழுகிறது. உடனே அவனுடைய தலைகள் அச்சத்தால் சுழல்கின்றன. தான் கேட்ட செய்தியை அவனால் நம்பவே முடியவில்லை. ஆகவே, அவன் தன்னுடைய ஒற்றர்களை நோக்கி, "உண்மையாகவே கட்டுண்டதா?' என்று கேட்க எண்ணுகிறான். அவனுடைய பரபரப்பிலே நாக் குழறுகிறது. அத்தனை முகங்களும் ஒருமித்து, அவர்களிடம் கேள்வி கேட்கின்றன. ஒவ்வொரு முகமும் கடலின் பெயர் ஒவ்வொன்றைக் குறிப்பிடுகிறது. அபாம்நிதி, ஜலநிதி, கீலாலதி, தோயதி, பாதோதி, ஜலதி, பயோதி, உததி, வாராங்நிதி, வாரிதி என்பன பத்தும் அவனுடைய முகங்கள்; அவனுக்கு அப்போதுள்ள பரபரப்பில் கூறிய பெயர்கள்.

*அரசர்:* ஒரே பாட்டிலே கடலின் பெயர்கள் பத்தை வரிசையாக அமைத்து, அதற்குப் பொருளும் பொருந்தும்படி அமைப்பது அருமையான செயல்தான். அந்த அருஞ் செயலை நீங்கள் வெற்றிகரமாக நிறைவேற்றிவிட்டீர்கள். ஆனால், உங்கள் பாட்டிலும் இராமநாத கவியின் பாட்டிலும், ஒரு குறை இருப்பதாகவே நான் கருதுகிறேன்.

*வாணிதாசர்:* அது என்ன குறை?

*அரசர்:* இராவணன் மகாவீரன். அவன் அச்சமுற்றான் என்றும், அவனுடைய நாவுகள் குழறின என்றும்

அவனுடைய தலைகள் கிறுகிறுத்தன என்றும் சொல்வது அத்தனை பொருத்தம் அன்று.

*வாணிதாசர்:* ஒப்புக்கொள்கிறேன். வேறு விதமாக இதே நிகழ்ச்சியைப் பாடிவிட்டால் போகிறது. ஐயா, மாளவ கவி, உம்முடைய முகத்தைப் பார்த்தால், நீர் அப்படி ஏதோ ஒரு பாட்டை இயற்றியிருக்கிறீர் என்று தோன்றுகிறது. உங்கள் பாட்டைச் சொல்லுங்கள், கேட்போம்.

*மாளவ கவி:* நீங்கள் சொன்னது சரிதான்.

*அரசர்;* உம்முடைய பாட்டில் இராவணன், தலை பத்தும் வருமா?

*மாளவ கவி:* வரும். பாட்டைச் சொல்லுகிறேன், கருத்தையும் கூறுகிறேன். கேளுங்கள்:

"கடலின் நீரிலே இடப்பட்ட பெருங் கற்களும் பாறைகளும் இறுகப் பிணைக்கப்பட்டவை போல் ஒன்றோடொன்று நெருங்கிக் கிடக்கின்றன. அவை யாவும் ஒன்றாகப் பொருந்தி, அணை வடிவமாக அமைந்து விட்டன' என்று பல ஒற்றர்கள் கூறக் கேட்டான் பத்து முடிகளோடு விளங்கிய இராவணன். உடனே அவனுக்கு அடங்காக் கோபம் வந்துவிட்டது. அது தன்னுடைய எதிரிகளின் மேலன்று; ஏனென்றால், அவர்கள் இவ்வாறு செய்ய முயல்வது நியாயந்தானே? தன்னுடைய ஒற்றர் களின் மேலும் அக் கோபம் செலுத்தப்படவில்லை. ஏனென்றால், தாங்கள் கண்ட செய்தியை உடனே அறிவிப்பதுதானே அவர்களுடைய கடமை? தனக்கு அடங்கிக் கிடந்து, தன்னால், 'நீ இலங்கையைக் காக்கும் அகழி யாகக் கிடப்பாயாக!' என்ற ஆணையை மேற்கொண் டிருந்த அலை மோதும் பெருங் கடல் என்ன செய்தது. குரங்குகள் இட்ட கற்களைச் சின்ன பின்னமாக்கி அலைகளால் சிதறி நாலு பக்கமும் வீசி எறிந்ததா? அவ்வாறு எறியவில்லையே. அதற்கு நேர் மாறாக, அது

அவற்றை ஏற்றுக்கொண்டது. அவற்றுக்கு ஒன்ருே டொன்று நெருங்க இடங் கொடுத்தது; அவற்ருல் கட்டும் உண்டது. இவற்றை நினைக்க, நினைக்க, இராவண னுக்குக் கோபம் பொங்கிக் கொண்டே யிருந்தது. ஆதலால், அவனுடைய முகங்கள் பத்தும் 'சீச்சீ' கடலே, இவ்வளவுதான உன்னுடைய ஆற்றல் எல்லாம்' என்று அதன் பெயர்களை மிகவும் இழிந்து கூறின. வாணி தாசர் குறிப்பிட்ட ஆறு பெயர்களோடு வேறு நான்கு பெயர்களையும் நான் சேர்த்திருக்கிறேன். அவற்றை வரிசையாகச் சொல்லுகிறேன். அம்புதி, ஸலிலதி, பானீயதி, தோயதி, பாதோதி, ஜலதி, பயோதி, உததி, வாராங்நிதி, வாரிதி என்பனவே அவை.

*அரசர்*: இராவணனுடைய கோப நிலையைக் குறிப் பிட, ஓசை அழுத்தமுள்ள இந்தப் பத்துச் சொற்களும் ஏற்ற சொற்கள் தாம். பாட்டும் நன்ருயிருக்கிறது. ஐயா, வாணிதாசரே, இனி உம்முடைய பாட்டைக் கேட்போம். கூட்டல், கழித்தல், வகுத்தல், ஆகிய மூன்றும் இதுவரை வந்துவிட்டன. உம்முடைய பாட்டில் பெருக்கல் ஏதாவது வைத்திருக்கிறீரா? ஆறை அறுபது என்ருே, அறுநூறு என்ருே பெருக்கி யிருக் கிறீரா?

*வாணிதாசர்*: அப்படி ஒன்றும் செய்யவில்லை. ஆறு பெயர்களை அப்படியே வைத்துக்கொண்டு பாடி யிருக்கிறேன். என் பாட்டு புராணக் கதையை ஒட்டியது; சேனுதிபதி அவர்களையும் ஒட்டியது.

*சேனுதிபதி*: எனக்கும் புராணக் கதைக்கும் என்ன தொடர்பு?

*அமைச்சர்*: சேனுதிபதியினுடைய வீரச் செயல் களைக் கூறினுல், அது புராணக் கதைகளைப்போல் இருக்கும் என்பது வாணிதாசருடைய அபிப்பிராயமா யிருக்கலாம்.

*வாணிதாசர்:* ஐயா, வீண் சண்டையைக் கிளப்பி விடாதீர்கள். இன்று இந்த நிகழ்ச்சி தொடங்கும்போது, சேனுதிபதியவர்கள் பெருங்கடலுக்கு இத்தனை வீண் பெயர்கள் வேண்டாம் என்று கூறினுர்கள். அந்தக் கருத்தை ஒட்டி, நான் கூறிய ஆறு பெயர்களை மட்டிலும் பாட்டில் அமைத்துப் பாடுவதுதான் இந்தச் சந்தர்ப்பத் துக்குப் பொருத்தமா யிருக்கும் என்று தோன்றிற்று.

*அரசர்:* உங்கள் பாட்டைச் சொல்லுங்கள்.

*வாணிதாசர்:* அப்படியே. இதுதான் பாட்டு. கேளுங்கள்:

'இத்தனை தடபுடலான ஓசையை உடைய பெயர் களை உனக்கு உலகம் இட்டு, உன்னைப் பாராட்டுவது வீண்' என்ற கருத்து அமையும்படி பாடினேன்.

'ஓ கடலே, மண் குடத்திலே பிறந்த குறுமுனி யாகிய அகத்தியரால் நீ குடிக்கப்பட்டு, இல்லையாளுய். தேவர்களும் அசுரர்களும் உன்மீது மந்தர மலையை மத்தாக இட்டு, வாசுகியைக் கயிருக்கி, உன்னைக் கடைந்து கலக்கினுர்கள். நீ மிக மிகக் குழப்பமுற்றுத் துன்புற்ருய். மிருதுவான இயற்கையையுடைய மனிதன் ஒருவன், இரகு வமிசத்திலே பிறந்தவன், உனக்குக் குறுக்காக ஓர் அணையைக் கட்டி, உன் பெருமையை அடக்கிவிட்டான். மரங்களின்மீது கிளையினின்று கிளைக் குத் தாவும் அற்பக் குரங்குகள் சிற்ருேடையைத் தாண்டிக் குதிப்பதுபோல், உன்னை எளிதில தாண்டிக் குதித்து விட்டன. இவ்வளவு சிறுமைகளை அடைந்த பின்பும் கூட, நீ ஆரவாரிக்கிருயே. இத்துணை தடபுடலான ஓசையையுடைய, 'பாதோதி, ஜலதி, பயோதி, உததி, வாராந்நிதி, வாரிதி, என்னும் பெயர் வரிசை உனக்கு இருப்பது பொருந்தாது. உன்னுடைய ஆரவாரப் பெயர் களை உலகத்தார் உரக்கச் சொல்லிக்கொண் டிருப்பது வீண். வீண் பெருமை உனக்கேன், கடலே?'

*அரசர்:* மற்றவர்கள் ஏதோ ஒரு நிகழ்ச்சியை மட்டிலும் குறிப்பிட்டார்கள். உங்களுடைய பாட்டிலே மூன்று புராணச் செய்திகள் வந்துவிட்டன. நாம் பேசிக் கொண்டிருந்த விஷயத்தோடும் அதைப் பொருத்தி விட்டீர்கள். பாட்டும் நன்ருக இருக்கிறது. இன்று காலை வேளை மிக நன்ருகக் கழிந்தது என்றே நான் எண்ணுகிறேன். நீங்கள் எல்லோரும் அப்படியே நினைப்பீர்கள் என்றே கருதுகிறேன்.

# 6. கோடி பெறும்

ஒரு நாள் காலை வேளையில், தனது பெருமன்றத்தில் நாற்புறமும் சிறந்த கவிகள் புடைசூழ, போஜன், வழக்கம் போல், கொலு வீற்றிருந்தான். அப்பொழுது அவனது வாயிற்காப்போன் ஒருவன் உள்ளே வந்து, "அரசே, கவிசேகரர் என்னும் ஒரு கவி தங்களைக் காண விரும்புகிறார். அவரை வாயிலில் நிறுத்திவிட்டுத் தங்களுடைய ஆணையைப் பெற்று, அவரை உள்ளே அழைத்து வரலாம் என்று எண்ணி வந்தேன். அவரைப் பார்த்தால் அவர் ஒரு மகாகவி என்று தோன்றுகிறது. அவரை உள்ளே அழைத்து வரலாமா?" என்று கேட்டான். அதற்கு அரசன், "அவரை ஏன் தடுத்தாய்? உடனே அழைத்து வா" என்று மலர்ந்த முகத்தோடு கூற வாயிற் காப்போனும் விரைந்து சென்று, அக்கவியை அழைத்து வந்தான்.

அந்தக் கவியும் அரச சபையை அடைந்து, அரசனது அருகே வந்ததும், அரசனை நோக்கி, "உமக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்!" என்று வாழ்த்தினான். பின்பு, "கவிதைக் கோயிலாகி, மாட்சிமை பெற்ற உனது திருமாளிகையின் வாயிலை நான் அடைந்தபோது, நான் உள்ளே செல்லலாகாது என்று உனது காவலாளர் என்னைத் தடுத்தனர். ஆதலால், அவரிடமிருந்து ஒரு வாரணம் (தடை) பெற்றேன். நீர் நிறைந்த பூரணப் பொற்குடத்தினின்று நன்னீர் ஒழுகுவதுபோல், நறுமணம் பொருந்திய மத நீர் எப்பொழுதும் பொழிந்து கொண்டே யிருக்கின்ற மத்தகங்களை உடைய சிறந்த வாரணங்களை (யானைகளை) நான் உன்னிடமிருந்து பெறவேண்டும் என்று ஆவல் கொண்டு, உன்னை அடைந்தேன், மன்னனே!" என்று பொருள்படும் ஒரு கவிதை

யைச் சொன்னான். அதன் மொழி பெயர்ப்புக் கீழ் வருமாறு:

'வாரணம் ஒன்று பெற்றேன்,
மாண்புறு நினது கோயில்
தோரண வாயில் காப்போர்
தடைசெய அவர்பால்; தூய
பூரண குடத்து நீர்போல்
பொழிமதம் நாறும் மத்த
வாரணம் பலவும் வேண்டி
வந்தனன் நின்பால், மன்னா!'

சபா மண்டபத்திலே உயர்ந்த பீடத்திலே கிழக்கு முகமாக வீற்றிருந்த அரசன் அந்தச் செய்யுளைக் கேட்டதும், சட்டென்று எழுந்திருந்து, தெற்கு முகமாகத் திரும்பி உட்கார்ந்தான்.

அதைக் கண்டதும், கவி மிகவும் மனவருத்தம் அடைந்து. 'என்ன இது? நான் கூறிய கவிதை அரசனுக்குப் பிடிக்கவில்லையே. அவனுக்கு அது வெறுப்பை உண்டாக்கியது போல் அல்லவா, தோன்றுகிறது? என்னைப் பார்க்க மனமில்லாதவனாய் அரசன் தன் முகத்தைத் திருப்பிக்கொண்டான். ஆயினும், என் வறுமை மானமில்லா என்னை மீண்டும் தூண்டுகிறது. மறுபடியும் அவனிடம் ஒரு பாட்டுச் சொல்லிப் பார்க்கிறேன். அப்பொழுதாவது அவனுடைய மனம் இரங்குமா? பார்ப்போம்' என எண்ணினான். தெற்கு முகமாக இருந்த அரசனின் முன்னிலையை அடைந்து, அவனை நோக்கி, முற்காலங்களில் வாழ்ந்த வீரர்களும், சிறந்த முனிவர்களும், அரசர்களும், விஞ்சையர்களும், சுவர்க்க லோகத்திலுள்ள தேவர்களும், இவர்களைப் போன்ற சிறப்பையுடைய பிறரும், எந்தக் காலத்திலும் அறியாத அருமையான வில் வித்தையை நீ எங்கே கற்றாய்? அரசனே! நீ வெகு காலம் வாழ்வாயாக' என்று பொருள்படும் மற்றொரு செய்யுளின் முதற்

பகுதியைச் சொன்னான். அதன் மொழிபெயர்ப்புக் கீழ்வருமாறு:

'முன்னை நாளினில், வீரர், முனிவரர்,
மன்னர், விஞ்சையர், வானுள விண்ணவர்,
அன்னர், என்றும் அறிகிலா வில்-திறம்
மன்ன; எங்கு, நீ, கற்றனை? வாழிய!'

இதைக் கேட்டதும், அரச சபையிலுள்ள கவிகளுக்கு ஒரு பரபரப்பு உண்டாயிற்று. 'நமது அரசன் சிறந்த வீரன்; வில்லாளி; உண்மைதான். ஆனால் மற்றவர்கள் அறியாத புதிய வில் – திறம் ஒன்று அவனிடம் இருப்பதாக நாம் அறியோமே? அயல் நாட்டிலிருந்து வந்த இந்தக் கவி இவ்வாறு ஏன் கூறுகிறான்?' என்று ஒருவரை யொருவர் அவர்கள் கேட்கத் தொடங்கினார்கள். அப்போது அந்தக் கவி சேகர கவி, 'அம்புறுத் தூணியிலே வைக்கப்படாத மார்க்கணக் கூட்டங்கள், அதாவது பரிசிலர் கூட்டங்கள் சோதியோடு விளங்கும் ஒளிச்சுடரை நாடி-சிறிய விட்டிற் பூச்சிகள் நாற்புறமிருந்து விரைந்து ஆவலோடு வருவன போல்—உன்னை நாடி வருகின்றன. உன்னுடைய கீர்த்தி முதலிய குணங்களோ எட்டுத் திக்குக்களுக்கும் சென்று பரவக் காண்கிறோம். இந்தப் புதுமையைக் கண்டவர் யார்?' என்று பொருள்படும் அப்பாட்டின் இரண்டாம் பகுதியையும் கூறினான். அதன் மொழி பெயர்ப்புக் கீழ்வருமாறு:

'புட்டிலுறு மார்க்கணத்தின் கூட்டங்கள், புன்மைமிகு
விட்டில் ஒளிச் சுடரருகே, விருப்பமுடன், வருவனபோல்
கிட்டவுமே நாணல்லா நின் குணமும் கீர்த்தி மிக
எட்டிசையும் சென்றதுவே இப்புதுமை கண்டார் யார்?'

(மார்க்கணம் - அம்பு; பரிசிலன். குணம் - நல்லொழுக்கம்; வில்லின் நாண். எண் திசை என்பது எதுகையின் பொருட்டு எண்டிசை என்று வராமல், எட்டிசை என்று அமைந்தது.)

இந்தச் செய்யுளைக் கேட்டவுடன், தெற்கு முகமாக வீற்றிருந்த அரசன் மீண்டும் எழுந்து, மேற்கு முகமாகத் திரும்பி உட்கார்ந்து கொண்டான்.

"ஆகா! எல்லாக் கவிகளையும் அணைத்துவரும் அரசன் என்மீது சிறிதேனும் கருணை கூரவில்லையே? என்னைப் பார்க்க விருப்பமற்றுத் தன் முகத்தைத் திருப்பிக் கொள்கிருனே' என்று அந்தக் கவி வருந்தி, 'மீண்டும் எதாவது ஒரு செய்யுளைச் சொல்லிப் பார்ப்போம். அவனுடைய கல் மனம் அப்பொழுதாவது இளகாதா என்று பார்ப்போம்' என்று நினைத்து, அரசன் திரும்பிய மேற்குப் பக்கமாகச் சென்றன். அவனது முன்னிலையை அடைந்து. "உலகத்தைப் பாதுகாக்கும் மன்னனே, நீ எல்லா வித்தைகளையும் சொற்களையும் கற்றவனுன, மிகச் சிறந்த அறிவாளி என்று எல்லாரும் உன்னைப் புகழ்ந்து கூறுகிருர்கள். ஆனல் இது முற்றும் பொய். நீயே பார். உன்னை நாடிப் பரிசில் பெற வரும் கவிகள் ஒருவர் முன்பாவது. 'இல்லை, போ' என்னும் மொழிகளைக் கூற நீ கற்றதில்லை, அல்லவா? இல்லவே இல்லை, அல்லவா?' என்று பொருள்படும் வேருெரு பாட்டைச் சொன்னுன். அதன் மொழி பெயர்ப்புப் பின் வருமாறு:

'யாவதும் பயின்றனை என்றுஉனை அனைவரும்
காவல, கூறுவார்; பொய்ம்மொழி, கருதுவாய்!
நாவினுல், 'இல்லை, போ' என்ற சொல் நவின்றிடல்
பாவலர் முன்பு நீ பயின்றிலாய், பயின்றிலாய்!'

இவ்வாறு கவியானவன் இகழ்வதுபோலப் புகழும் வசை புகழாக, அரசனைப் புகழ்ந்து கூறிய செய்யுளைக் கேட்ட அரசன் அத்திசையை விட்டுத் திரும்பி, வடக்கு நோக்கி, உட்கார்ந்துகொண்டான்.

அரசன் யாதொரு மொழியும் கூருமல், தான் நின்ற திக்கையே நோக்க மனமில்லாதவனைப் போல், மீண்டும்

வேற்ேர் திசையை நோக்கித் திரும்பக் கண்ட புலவன், ‘என்னுடைய வறுமை இங்கு வந்தால் தீரும் என்று ஆவலாய் வந்தேனே. இப்போதும் அது தீரக் காணேமே. வடபுறமாய்த் திரும்பி யிருக்கும் அரசன் முன்னம் சென்று, கடைசியாக, இன்னும் ஏதாவதொரு பாட்டை சொல்லிப் பார்ப்போம்’ என்று நினைத்து, வடக்குத் திசையை நோக்கி வீற்றிருந்த அரசனது முன்னர்ச் சென்று, “அரசனே, உன்னை நாடி வருபவர்களுக்கு உனது உடைமைகள் எல்லாவற்றையும், ஓர் வரம்பும் இல்லாமல் அளிக்கும் கொடையாளி நீ என்று அறிஞர்கள் உன்னைப் புகழ்ந்து கூறுகிறார்கள். அவர்கள் கூறுவது பொய். ஏனென்றால், நீ யாவரையும் நன்கு பாதுகாப்பினும், தூய ஒழுக்கத்தை உடைய நீ பிறர் மனைவியரைக் கண்டதும், மறு புறம் திரும்பி, உன் முதுகையே அவர் களுக்கு அளிக்கின்றாய்; உனது மார்பை அவர்களுக்குக் கொடுப்பதே இல்லை” என்னும் பொருளுடைய பாட்டு ஒன்றைச் சொன்னான். அதன் மொழி பெயர்ப்புப் பின் வருமாறு:

*‘என்றும் நீ எதுவுமே வரைவிலாது ஈகுவாய்*
*என்றுஉனை அறிஞர்கள் இயம்புவார்; பொய் அது!*
*நன்று நின் புறமலால், பிறர்மனை நங்கையர்க்கு,*
*என்றுமே புனித, நீ மார்பகம் ஈகலாய்.’*

இதைக் கேட்ட அரசன் தான் வீற்றிருந்த சிங்கா தனத்திலிருந்து எழுந்து உள்ளே சென்றான்.

அரசன் விரைந்து செல்லுவதைக் கண்ட கவி, தனக்கு அரசன் யாதொன்றையும் அளிக்காமல் சென்று விட்டான்; கவிகள் அனைவரையும் பாதுகாத்து, பரிசில் அளிக்கும் பேரரசனாகிய போஜன் தனக்கு யாதொன்றுமே அளிக்காமல் உள்ளே சென்றதற்குத் தனது துர்பாக்கியமே காரணம் என்று எண்ணித் தனது வருத்தத்தை, ‘ஏ போஜ மன்னனே, மேகமானது உலகத்திலே மழையைப் பொழிந்து அதைச் செழிக்கச் செய்வதுபோல், நீயும் ஒரு



மேகமாகி உலகம் எங்கும் பொன்மாரி பொழிந்துவருகிருய். நீ அளிக்கும் கொடை நாலு பக்கமும் வீசி வழங்கப்படு கிறது. ஆனல் கேடுகாலம் என்னும் ஒரு கனத்த குடை யானது என்னை மிகவும் நன்ருகச் சுற்றி அமைந்திருக் கிறது. நீ பொழியும் பொன்மாரியில் ஒரு திவலைகூட என்மீது படாமல் அந்தக் குடையானது மிகவும் நன்ருக என்னைக் காக்கிறது' என்று பொருள்படும் ஒரு பாட்டினல் வெளியிட்டான். அதன் மொழி பெயர்ப்புக் கீழ்வருமாறு:

'போச, நீ ஓர்புயலாப், பூமுழுதும் பொன்மாரி
வீசுவாய்; ஆங்கு அதில் ஓர் விந்தேனும் பேசும் என்மேல்
பட்டதிலை; என் வறுமை, பாரக் குடையாகி,
முட்டக் கவித்திடுத லால்.'

(இந்த மொழி பெயர்ப்பை இயற்றியவர் பலபட்டடைச் சொக்கநாதப் புலவர்.)

வேறோர் எண்ணங்கொண்டு, தான் இனி அவ்இடத்திலேயே இருக்கலாகாது என்று நினைத்து, விரைந்து, உள்ளே செல்லும் அரசனது காதில் கவி கூறிய இம் மொழி விழவேயில்லை. ஆனால், கவியோ அரசன் தன்னைச் சிறிதேனும் மதிக்கவில்லை என்று மனம் நொந்து, அரண்மனையை விட்டு வெளியே சென்றான்.

இவ்வாறு வெளிச் சென்ற கவிசேகரன் மிக்க மன வருத்தத்தோடு அரண்மனை வாயிலை அடைந்தான். அப்போது அரசனுடைய முதன் மந்திரியாகிய புத்தி சாகரன், தற்செயலாக, அவ்விடம் வர நேர்ந்தது. ஏங்கிய மனத்தோடு அரண்மனை வாயிலை விட்டு வெளியேறும் கவி எவனையுமே, அன்றுவரை, அம்மந்திரி கண்டதில்லை. ஆதலால், கவிசேகரனுடைய முகத்தில் தோன்றிய வருத்தக் குறிகளைக் கண்டு, புத்திசாகரன் திகைப் படைந்தான். கவிசேகரன் சிறந்த கவி என்பதை அவன் முகத்தின் ஒளியே தெரிவித்தது.

ஆதலால், மந்திரி கவியை நோக்கி, "மகாகவி, அரசன் இன்று உமக்கு என்ன பரிசு கொடுத்தான்?" என்று கேட்டான். அப்போது கவி, துயரம் நெஞ்சை யடைக்க, 'ஒன்றும் இல்லை' என்றான். அதைக் கேட்ட மந்திரி, தன் மனத்தில் எழுந்த வியப்பை ஒருவாறு அடக்கிக்கொண்டு, 'அப்படியா? நீங்கள் அங்கே ஏதாவது பாட்டுச் சொன்னீர்களா?' என்று கேட்க, கவியும், 'ஒன்றல்ல, நாலு, ஐந்து, செய்யுள்களைச் சொன்னேன். ஆனால் அரசனுக்கு என்னைப் பார்க்கக்கூட மனம் வர வில்லை. என்னிடம் ஒரு சொல்லும் கூடப் பேசவில்லை' என்றான். 'அந்தச் செய்யுட்களை என்னிடம் சொல்ல லாமோ?' என்று மந்திரி கேட்க, கவியும் தான் அரசனிடம் கூறிய செய்யுட்களை, மீண்டும், அவனிடம் கூறினான்.

அவற்றைக் கேட்ட புத்திசாகரன், அன்று அரச சபையில் என்ன நடந்தது என்பதை தொடக்கம் முதல் முடிவு வீரை அவனைக் கூறும்படி வேண்டினான். கவியும்,

ஒன்று விடாமல், நடந்த செய்தி முழுவதையும் சொன்னான். அதைக் கேட்டதும், மந்திரி கவியை நோக்கி, 'கவியே நீர் வருந்த வேண்டாம். போஜனுடைய சபையை விட்டு நீர் வெறுங் கையோடு போகலாகாது. இன்று எங்கள் அரசன் உமக்கு அளித்ததை நான் உம்மிடம் விலை கொடுத்து வாங்கிக்கொள்கிறேன். ஒரு கோடிப் பொன் தருகிறேன், அரசன் உமக்குக் கொடுத்தவை முழுவதையும் நீர் எனக்குத் திரும்பக் கொடுத்து விடுவீரா?' என்றான். இதைக் கேட்ட கவி முன்னிலும் அதிக வியப்புற்றானாயினும், மந்திரியின் வேண்டுகோளுக்கு இணங்கி, தனக்கு அரசன் கொடுத்தது முழுவதையும் திரும்ப அவனுக்கே அளித்து விட்டதாக வாக்குறுதி செய்து, மந்திரி கொடுத்த கோடிப் பொன்னைப் பெற்றுக்கொண்டு, மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். ஆயினும், அவன் அப்போது, 'இது என்ன? ஒரே புதுமையாக இருக்கிறதே! என் கவியைக் கேட்ட அரசனோ கொடைக்குப் பெயர் போனவன்; அவன் எனக்கு ஒன்றுமே அளிக்கவில்லை. இதைப் போன்ற விந்தையை நான் இதுவரை கண்டதில்லை என்று நினைத்திருந்தேன். அதனினும் பெரிய விந்தையாக மற்றொன்று இப்பொழுது தோன்றுகிறதே. அறிவிற் சிறந்த அவனுடைய முதன் மந்திரி, அரசன் எனக்கு ஒன்றுமே கொடா திருக்கையில், 'அரசன் உனக்குக் கொடுத்ததைத் திரும்பக் கொடு. கோடிப் பொன்னை விலையாகத் தருகிறேன்' என்கிறான். இது விந்தையினும் விந்தையாக இருக்கிறதே' என்று பல முறை எண்ணிக் கொண்டே, அரண்மனையை விட்டு வெளியே சென்றான்.

இதற்கிடையில், அரச சபையை விட்டு நீங்கிய அரசன் நேராகத் தன் மனைவி லீலாதேவி இருக்கும் அந்தப்புரத்தை அடைந்தான். அவன் முகத்தில் மகிழ்ச்சியும் வருத்தமும் மாறி மாறித் தோன்றக் கண்ட லீலாதேவி, மிகவும் ஆதரவோடு, அவனிடம், "சபையில்

இன்று ஏதாவது நிகழ்ந்ததா? உங்கள் முகத்தில் இடையிடையே தோன்றும் வருத்தக் குறிக்குக் காரணம் என்ன என்பது எனக்கு விளங்கவில்லையே?'' என்று வினவினாள்.

அப்போது அரசன், ''இன்று கவிசேகரன் என்ற சிறந்த கவி ஒருவன் நமது சபைக்கு வந்தான். அப்போது நான் உதய சூரியனது அழகை அநுபவித்துக்கொண்டு, கிழக்கு முகமாக, உட்கார்ந்திருந்தேன். அவன் என்னைப் பார்த்து ஒரு கவிதையைப் பாடினான். அது மிகவும் சிறந்த கவியாக இருக்கக் கண்டு, அவனுக்குக் கீழ்த் திசையிலுள்ள நமது இராச்சியம் முழுவதையும் மனத்தால் தானம் செய்தேன். அவனுடையதாகிவிட்ட இராச்சியப் பகுதியை இனிமேல் நான் கண்ணால் பார்க்கலாகாது என்று எண்ணி, தெற்கு முகமாகத் திரும்பி, உட்கார்ந்தேன்.

''அங்கும் அவன் வந்து, வேறு ஒரு கவிதையைப் பாடினான். அதுவும் சிறந்ததாக இருக்கக் கண்டு, நான் தெற்குத் திசையிலுள்ள நமது இராச்சியம் முழுவதையும் அவனுக்கே கொடுத்துவிட்டதாக மனத்தில் எண்ணி, மேற்கு முகமாகத் திரும்பி உட்கார்ந்தேன். அங்கும் அவன் எனக்கு எதிராக வந்து, மற்றொரு கவிதையைப் பாடினான். அதன் சிறப்பை மனத்தால் பாராட்டி, மேற்குத் திசை முழுவதையும் அவனுக்கு அளித்துவிட்டு, வட திசையை நோக்கித் திரும்பி, உட்கார்ந்தேன். அதுவும் மிகச் சிறந்ததா யிருந்தது; ஆதலால், அத்திசை முழுவதையும் அவனுக்கு மனமாரக் கொடுத்துவிட்டேன்.

'அழகிய கவிதைகளை இன்று பாடிய கவிசேகரன் என்னும் அந்தக் கவிக்கு இவ்வாறு என்னுடைய இராச்சியம் முழுவதையும் தானம் செய்துவிட்டேன். ஆதலால் நாம் இனி இந்த நகரத்தில் இருக்கலாகாது. நாம் தவம் செய்யும் காட்டுக்குச் செல்வதே தகுதி. நாம் இருவரும் உடனே நாட்டை விட்டு வெளியே செல்ல

வேண்டும். எனக்கு இதைப் பற்றி மிகவும் மகிழ்ச்சியே. ஆயினும், இச்செய்தியைக் கேட்டால், ஒருவேளை உனக்கு வருத்தம் உண்டாகுமோ என்று நான் எண்ணியபோதெல்லாம் என் மனம் வருத்தமுற்றது. இவ்இரண்டு மனநிலைகளின் குறிகளைத்தான் எனது முகத்தில் நீ கண்டாய்'' என்றான்.

அதற்கு லீலாவதி, 'ஒரு கவிஞனுக்கு நமது அரசை அளித்து, நாம் கவலையின்றித் தவம் செய்யச் சென்றால், அதில் எனக்கு வருத்தம் உண்டாகுமா? நாம் உடனே தவம் செய்யும் வனத்துக்குப் புறப்படுவோம்' என்று அவளும் புறப்பட ஆயத்தமானாள். அரசனும் இச் செய்தியைத் தன் மந்திரியாகிய புத்திசாகரனுக்குச் சொல்லி யனுப்பினான்.

கோடிப் பொன்னைக் கொடுத்துக் கவியை வழி யனுப்பிய புத்திசாகரன் அரண்மனையினுள்ளே சென்றதும் அங்குள்ள காவலாளன் ஒருவன் ஓடிவந்து, 'ஐய, அரசர் தங்கள் வரவை எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்' என்று சொல்லவும், மந்திரி அரசனிடம் விரைந்து சென்றான்.

அவனைக் கண்ட அரசன், 'புத்திசாகரரே, எனது இராச்சியம் முழுவதையும் இன்று வந்த கவி ஒருவனுக்குப் பரிசாகக் கொடுத்துவிட்டேன். என் மனைவியுடன் தவம் செய்யும் வனத்துக்குப் புறப்பட்டுக்கொண் டிருக்கிறேன். அந்த வனத்துக்கு வர வேண்டும் என்னும் எண்ணம் ஒருவேளை உங்களுக்கும் இருந்தால், நீங்களும் எங்களோடு புறப்படலாம்' என்று நாட்டிலும் சிறந்த காட்டுக்கு வரும்படி, மந்திரியை அழைத்தான்.

அதைக் கேட்ட மந்திரி, சிரித்துக்கொண்டு, 'இந்தப் பேரரசின் பெரும் பொறுப்பை உங்களிடமிருந்து நீக்க நாங்கள் இன்னும் தயாராக இல்லை; அந்தக் கவியும் அந்தப் பொறுப்பைத் தாங்குவதற்கு ஏற்றவன் அல்லன். ஆதலால், கோடி பொன்னை விலையாகக் கொடுத்து,

நீங்கள் கவிக்கு அளித்த இராச்சியத்தை நான் மீண்டும் விலைக்கு வாங்கிவிட்டேன். கவிக்கும் பேசியபடி கோடிப் பொன்னைக் கொடுத்தாய்விட்டது. ஆதலால், இந்தப் பேரரசும், இதை ஆளும் பொறுப்பும், இன்னும் உங்களுடையதாகவே இருக்கிறது. இந்த இராச்சியத்திலே எல்லா இன்பங்களையும் அநுபவித்தும், சிறப்பாக நீதி முறையில் அரசியலை நடத்தியும், கவிகளை மேன்மேலும் நன்கு போற்றிப் பாராட்டிப் பரிசளித்தும், நீங்கள் இருவரும், நீடூழி காலம், இனிது வாழவேண்டும்' என்று அரசனையும் லீலாவதியையும் வாழ்த்தினான்.

# 7. சுவை அறிந்த மன்னன்

வேதங்களை முறையே கற்று, நாள்தோறும் ஓதி வந்த அந்தணர்கள் சிலர் தாங்களும் கவிபாடிப் பரிசில் பெற எண்ணினார்கள். அவர்கள் சுருதியிலும், ஸ்மிருதியிலும், கரைகண்டவர்கள். எல்லையற்ற மொழிப் பயிற்சி உடையவர்கள். அவர்கள் ஒன்றுகூடிக் கவி இயற்றத் தீர்மானித்தார்கள். நகரத்துக்கு வெளியிலுள்ள ஓர் ஆலயத்துக்குச் சென்றார்கள். அங்கு இனிமையாய் அமைந்திருந்த தேவியின் திருவே செறிந்த முன்னிலையில் நின்று, அவளை வழிபட்டு வணங்கினார்கள். 'உலகுக்கெல்லாம் தலைவியான புவனேசுவரியின் திருவருளால் நாமும் இன்று கவிதையைப் படைப்போம்; என்னும் உறுதியான கருத்தைத் திடமாக மேற்கொண்டு, தெய்வத்தின் சந்நிதியில் உட்கார்ந்துகொண்டார்கள். நெடுநேரம் கடும்பாடுபட்டுக் கவிதையை இயற்ற முயன்றார்கள்.

கடைசியில், அவர்களுள் ஒருவன் தான் சிறந்த கவிஞன், அறிஞன் என்று பெருமை கொண்டவன், வேதத்தின் ஓசை தன் காதுகளில் இடைவிடாது ஒலிக்கக் கேட்டவன்—செய்யுளின் ஒரு பகுதியைப் படைத்துக் கூறினான். அது பின்வருமாறு அமைந்தது.

'போசனம் தந்திடாய், போச மாராசனே'

இப்படி அவன் ஒரு செய்யுளின் ஓர் அடியை இயற்றிய பின், அவனுடைய கவிதையின் ஊற்று வறண்டு போயிற்று. அதற்கு மேலே ஒன்றும் இயற்ற முடியாமல், அவன் தலையைச் சொறிந்துகொண் டிருக்கையில், தானும் ஒரு கவி என்று நினைத்த மற்றொருவன் செய்யுளின் முதற்பாதியின் மற்றோர் அடியை வேதமந்தி

ரத்தை ஓதுவதுபோல், பின்வருமாறு அமைத்து மந்திரத்தைப் போய் செபித்தான்.

'வாசனை வீசு நெய் பருப்பொடு வயணமாய்'

என்பது அந்த அடி. அதற்குமேல் அவனுடைய கவிதையும் பெருக்கற்றுப் போய்விட்டது. இவ்வாறு செய்யுளின் முதற் பாதியை இருவருமாகப் பாடிமுடித்த பின்பு, அவர்கள் அனைவரும் ஒருங்கு சேர்ந்து, நெற்றியைச் சுருக்கியும், முகத்தைக் கடுத்தும், முடிவு பெருத கவிதைப் பகுதியை இயற்ற அரும்பாடுபட்டும், இரண்டாம் பாதியில் ஓர் எழுத்துக் கூட அவர்களுடைய அறிவில் உதிக்கவில்லை; நாவில் எழவும், இல்லை.

அப்போது அந்தக் கோயிலுக்குத் தெய்வத்தை வணங்கும்பொருட்டுக் காளிதாஸன், தற்செயலாய், வர நேர்ந்தது. அந்த அந்தணர்களுடைய மனம் முழுவதும் கவிதை இயற்றுவதில் ஈடுபட் டிருந்தபடியால், அவர்களில் ஒருவரும் காளிதாஸன் வந்ததைக் கவனிக்கவில்லை. சாதாரணமாக அமைதி குடிகொண் டிருக்கும் அவர்களுடைய முகங்களில் சுருக்கம் விழுந்து, கவலை குடிகொண் டிருப்பதையும், அவர்கள் ஏதோ தீவிரமான முயற்சியில் ஈடுபட்டிருப்பதையும், அங்கு வந்த மகாகவி கண்டான். அவர்களை அணுகி, வந்தனம் செலுத்திவிட்டு, "நீங்கள் ஏதோ பெரிய முயற்சியைக் கைக்கொண் டிருப்பதாகத் தோன்றுகிறதே?" என்று கேட்டான்.

உடனே அவர்கள் பரபரப்போடு எழுந்து, அவனை நோக்கி, "நாங்கள் எல்லா வேதங்களையும் குறைவில்லாமலும், நன்ருகவும் படித்திருந்தும், நம் அரசனுன போஜ மகாராஜன் எங்களுக்குப் பெரிய வெகுமதி ஒன்றும் அளிப்பதில்லை. உங்களைப் போன்றவர்களுக்கு, நீங்கள் விரும்பிய எல்லாவற்றையும், கங்கு கரையின்றி, மனமுவந்து, அளித்து வருகிருன். ஆதலால், நாங்களும்

சோம்பல் இல்லாமல் முயன்று, எப்படியாவது ஒரு கவிதையை இயற்றித் தீரவேண்டும் என்னும் எண்ணத்தை மனத்தில் கொண்டோம். அதை நிறைவேற்ற இங்கே வந்து கூடியிருக்கிறோம். நாங்கள் முயலத் தொடங்கி, நெடுநேரம் ஆயிற்று. இவ்வளவு நேரமும் ஓயாது முயன்று, மேன்மேலும் பற்பல ஆலோசனைகளைச் செய்து, ஒரு மட்டுக்கு, ஒரு செய்யுளின் முற்பகுதியை அமைத்துவிட்டோம். பிற்பகுதியை எங்களால் அமைக்க முடியவில்லை. நீங்கள் பிற்பகுதியை எங்களுக்காக இயற்றியருள வேண்டும். அப்பொழுது எங்கள் செய்யுள் நிரம்பும். அரசனிடமிருந்து எங்களுக்கு ஏதாவது கிடைப்பதும் நிச்சயம்'' என்றார்கள்.

''நீங்கள் இயற்றிய பகுதியைக் கூறுங்கள். இயன்ற வரையில், நான் அதை நிரப்பப் பார்க்கிறேன்'' என்று, அன்பும் அடக்கமும் ததும்பும் குரலில், காளிதாஸன் வணக்கத்தோடு கூறினான்.

அப்போது அவர்களுள் ஒருவன் தொண்டையைக் கனைத்துக்கொண்டு, தாங்கள் ஏற்கனவே இயற்றி எழுதி வைத்த,

'போசனம் தந்திடாய் போசமா ராசனே
வாசனை விசு நெய் பருப்பொடு வயணமாய்'

என்ற முதற் பாதியைப் படித்துக் காட்டினான்.

அதைக் கேட்டதும் காளிதாஸன் சற்றும் தயங்காமல், மலர்ந்த முகத்தோடு, 'சரற் காலத்துச் சந்திரனுடைய நிலவைப் போன்று, வெண்மையான எருமைத் தயிரோடுகூட' என்று பொருள்படும் ஒரு பகுதியைக் கூறினான்.

அதைக் கேட்டவுடன், அங்குள்ள அந்த அந்தணர்கள் அனைவரும் அவனை வாழ்த்திவிட்டு, அதைப் பாடம் பண்ணிக்கொண்டு, பரபரப்பாக, அரசனைக் காணச்

சென்றார்கள். அரசனுடைய மாளிகைக்குச் சென்றதும், அங்குள்ள வாயிற்காப்போர்களை நோக்கி, "நாங்கள் ஒரு கவிதையை இயற்றிக்கொண்டு வந்திருக்கிறோம். எங்களை அரசன் முன்னிலைக்கு அழைத்துச் செல்வது உங்கள் கடமை" என்றார்கள்.

அவர்களைக் கண்டதும், பரபரப்பாய், எழுந்திருந்த காவலாளிகள் அவர்களுடைய பேச்சைக் கேட்டதும் சற்றே வியப்படைந்தார்கள். அக்காவலாளிகளுடைய முகத்தில் மெல்லிய புன்னகை அரும்பிற்று. அதை அடக்கிக்கொண்டு, அவர்கள் அரசனிடம் சென்றார்கள். அரசன் முன்னிலையில் சென்று, அவனை வணங்கி பின்வருமாறு தெரிவித்தார்கள் :

"மறுவிலா மொச்சைபோல் வரிசையாம் பல்லினர்,
இறுகவே முன்கையை இடுப்பினில் வைத்தவர்.
இறைவ, நின் வாயிலை எய்தினர் பரிசிலர்,
மறையெலாம் ஓதியோர், கவிதையில் மாற்றலர்."

'அவர்களை உடனே உள்ளே அழைத்துவாருங்கள்' என்று அரசன் தயங்காமல் கட்டளையிட, ஏவலாட்களும், அவ்வாறே செய்தார்கள்.

அந்த அந்தணர்கள் அனைவரும் உள்ளே வந்து அரச சபையின் நடுவில் வரிசையாக நின்றுகொண்டு, ஒருமித்து, வேதமந்திரத்தைச் செபிப்பது போல, தாங்கள் இயற்றிக் கொணர்ந்த கவிதையைச் சுரத்தோடு பின்வருமாறு சொன்னார்கள்.

"போசனம் தந்திடாய், போச மாராசனே
வாசனை வீசுநெய் பருப்பொடு வயணமாய்
மாசிலா முன்பனி மதி பொழி நிலவிலும்
தேசுறு மேதியின் தீஞ்சுவைத் தயிரோடு"

அதைக் கேட்டவுடன், கவிதைச் சுவையை நன்குணர்ந்த அரசனுடைய மனத்தில் வருத்தமும் களிப்பும்

ஒருங்கே தோன்றின. அந்த உணர்ச்சிகளை அவன் முகம் எடுத்துக் காட்டிற்று.

அவன் அந்த அந்தணர்களை நோக்கி, 'இந்தச் செய்யுளின் முற்பகுதியை யார் இயற்றினார்களோ அவர் களுடைய வாயிலிருந்து கவிதை என்பது இனி எக்காலத் திலும் வரலாகாது என்பது என் ஆணை. நீங்கள் கூறிய செய்யுளின் பிற்பகுதியின் பொருட்டு, உங்களுக்கு ஏதோ தருகிறேன். முற்பகுதி ஒரு காசுகூடப் பெறாது என்று சொல்லிவிட்டு, செய்யுளின் பிற்பகுதிக்கு எழுத்துக்கு லட்சம் பொன் வீதம் அளித்தான். அரசன் அளித்த பொன்னை அவர்கள் தட்சிணையைப் போல் பெற்றுக் கொண்டு, அரசனை மனமார வாழ்த்தி வெளியே சென்றார்கள்.

அவர்கள் வெளியே சென்ற பின்பு அரசன் அங்கு வீற்றிருந்த காளிதாஸனை நோக்கி, 'இவர்கள் இப்பொழுது கூறிய செய்யுளின் பிற்பகுதியை இயற்றியவன் நீதான் என்பதில் எனக்கு எவ்வித ஐயமும் இல்லை' என்றான்.

அதற்குக் காளிதாஸன், 'மன்னா, நீ சுவை அறிந்தவன்' என்றான்.

# 8. முஞ்சனும் சோதிடனும்

முன்னொரு காலத்தில், தாரா ராஜ்யத்தில், சிந்துலன் என்னும் பெயருடைய ஓர் அரசன் தன் குடிகளை நெடுங்காலம் ஆண்டுவந்தான், அவனுடைய முதுமைப் பிராயத்தில், அவனுக்குப் போஜன் என்ற ஒரு மகன் பிறந்தான். சிறுவனுக்கு ஐந்து வயது ஆனபோது, அரசனுக்கு மூப்பு முதிர்ந்துவிட்டது. தனக்கு வயது மேலிட்டதை உணர்ந்த அரசன், தன்னுடைய முக்கிய மந்திரியை அழைத்து, 'என்னுடைய சகோதரனாகிய முஞ்சன் மிகவும் வலிமையுள்ளவனாக இருக்கிறான். என் மகனோ மிகவும் இளம்வயதினன். நமது அரசாங்கத்தை ஏற்று நடத்தும் திறமை வாய்ந்த என்னுடைய உடன் பிறந்தவனாகிய முஞ்சனை ஒதுக்கிவிட்டு, அரசாங்கத்தை என்னுடைய மகனுக்குக் கொடுத்தால் உலகம் என்னைக் குறை கூறும் அல்லவா? மேலும், முஞ்சன், அரசாங்கத்தைத் தான் பெறவேண்டும் என்ற ஆசையால். நஞ்சு முதலியவற்றால் என் மகனைக் கொன்றுவிடவும் எண்ணக் கூடும். அப்படி அவன் செய்வானானால், நான் கொடுத்த போதிலும், இந்த இராச்சியம் என் மகனுக்குக் கிட்டாது. அதுவும் அன்றி, நான் செய்த செயலே என் மகன் இறப்பதற்குக் காரணம் ஆகிவிடும். அதோடு என் வமிசமும் அழிந்துவிடும். ஆதலால், நீ தக்க ஆலோசனை கூற வேண்டும் என்று சொன்னான்.

பிறகு இருவருமாக ஆலோசனை செய்து, ஒரு முடிவுக்கு வந்தார்கள். அதைப் பின்பற்றி, அரசன் தனது ராஜ்யத்தை முஞ்சனிடம் கொடுத்தான். அவனுடைய மடியில் தன் அருமை மகனாகிய போஜனை உட்கார வைத்து, முஞ்சனிடம் அவனை அடைக்கலமாக ஒப்பித்தான்.

இதற்குப் பிறகு சில வருஷங்கள் சென்றன. நாளடைவில், அரசனது மூப்பு மிகுந்து, அவன் மரணம் அடைந்தான். அதன் பின்பு ராஜ்யத்தின் செல்வத்தையும் அதிகாரத்தையும் ஒருங்கே பெற்ற முஞ்சன் அக்காலம் வரை முக்கிய மந்திரியாக இருந்து, அரசனுக்கு ஆலோசனைகள் கூறி, அரசாங்கத்தை நடத்திவந்த புத்தி சாகரன் என்பவனை அரசியல் தொழிலில் ஏவுவது என்றும் போலிக் காரணம் கூறி, நெடுந்தூரத்துக்கு அப்பாலுள்ள ஓர் இடத்திற்கு அனுப்பினான். அவனுக்குப் பதிலாக, வேறு ஒருவனை முக்கிய மந்திரியாக நியமித்துக்கொண்டான். தக்க ஆசிரியர்களை அமர்த்தி, அரசகுமாரனாகிய போஜனுக்குக் கல்வி பயில்வித்து வந்தான்.

இப்படியிருக்கையில், ஒரு சமயம், அரசன் தன்னுடைய கொலுமண்டபத்தில் வீற்றிருந்தபோது, சோதிட நூல்களில் கரைகண்டவனும், எல்லாக் கலைகளையும் கற்றுத் திறமைபெற்றவனும் உள்ள பார்ப்பனன் ஒருவன் அங்கே வந்தான். 'அரசனுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகுக! என்று வாழ்த்திவிட்டு, அங்குள்ள ஓர் இருக்கையில் அவன் அமர்ந்தான். பின்பு அவன், 'அரசே, உலகம் முழுவதும் என்னை முற்றும் உணர்ந்தவன் என்று போற்றுகிறது. ஆகையால், தாங்கள் எதை வேண்டுமானாலும் என்னைக் கேட்கலாம். தங்களுடைய கேள்விகளுக்கு விடை சொல்லுவதற்கு நான் ஏடுகளைப் புரட்ட வேண்டியதில்லை. எனது ஆசானிடம் சென்று, தெரிந்துகொள்ள வேண்டியதில்லை. தாங்கள் கேட்டதுமே, பளிச்சென்று, வாய் திறந்து, விடை சொல்லுகிறேன்' என்றான்.

அந்தச் சோதிடன் தன் திறமை தோன்றப் பேசிய தற்பெருமை நிறைந்த சொற்களை அரசன் கேட்டான். அவனைப் பரீட்சிக்க எண்ணி, 'ஐயா, நான் பிறந்த நாள் முதல் இக்கணம் வரையில் என்னால் செய்யப்பட்டவை



எல்லாம் இன்ன இன்ன என்று உறுதியாகச் சொல்வீராஞல், உம்மை எல்லாம் உணர்ந்தவர் என்று ஒப்புக்கொள்வேன்' என்ருன். அதைக் கேட்ட பிராமணனும் அரசன் செய்த செயல்கள் அனைத்தையும் — பிறர் ஒருவருக்கும் தெரிந்திருக்க முடியாத இரகசியங்கள் உள்பட— வரிசையாகச் சொன்ஞன்.

அதைக் கேட்ட அரசன் பழைய நிகழ்ச்சிகள் எல்லாம் நினைவுக்கு வர, அவற்றை உண்மை என உணர்ந்து, மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். தன்னுடைய சிங்காதனத்திலிருந்து இறங்கி, ஐந்தாறு அடி எதிர்கொண்டு நடந்து, அவனது காலில் விழுந்து வணங்

கிறான். பின்பு, அவனை மெதுவாக அழைத்துவந்து, இந்திரநீலம், புஷ்பராகம், மரகதம், வைடூரியம் முதலிய இரத்தினங்கள் இழைத்த தன்னுடைய அழகிய சிங்காதனத்தில் வீற்றிருக்கச் செய்தான். சிறந்த குதிரைகளில் பத்தை அவனுக்கு வெகுமதியாக அளித்தான்.

அப்போது சபைக்கு வந்திருந்த புத்திசாகரன் அரசனை வணங்கி, "அரசே! போஜனுடைய சாதகத்தைப் பற்றி இவரிடம் கேளுங்கள்" என்றான். உடனே அரசன் அந்தச் சோதிடனை நோக்கி, 'ஐயா, போஜனுடைய சாதக பலன்களை எங்களுக்கு எடுத்துரைத்து அருளவேண்டும்' என்றான். அப்போது அந்தப் பார்ப்பனன் அரசனை நோக்கி, 'இப்போது ஆசிரியரிடம் கல்வி கற்றுக்கொண்டிருக்கும் போஜனை இங்கே அழைத்துவரச் சொல்லுங்கள்' என்றான்.

போஜகுமாரன் அப்போது இன்ன இடத்தில் இருக்கிறான் என்பதை வேறு யாரும் சொல்லாமலே, தானாக அறிந்து சொன்ன பிராமணனுடைய திறமையைக் கண்டு அரசன் வியந்து, 'பள்ளிக்கூடத்திற்கு அணிகலனாக விளங்கும் அரசகுமாரனை அழைத்து வாருங்கள்' என்று தன்னுடைய ஏவலாட்களை மன மகிழ்ச்சியோடு அனுப்பினான். முஞ்சனைத் தன்னுடைய தந்தையைப் போல் மதித்துப் பாராட்டி வந்த அரசகுமாரன் அரசனுடைய ஆணையைக் கேட்டு, உடனே புறப்பட்டு, அரச சபைக்கு வந்தான். மிகவும் அடக்கத்தோடு அரசனை வணங்கி, மரியாதையோடு ஒருபுறமாக நின்றான்.

அந்த அரச சபையில் வீற்றிருந்த சிற்றரசர்கள் அனைவரும் அவனுடைய அழகையும் தோற்றப் பொலிவையும் கண்டு, மிகவும் வியந்தார்கள். 'அளவற்ற செல்வமும் சிறப்பும் படைத்த தேவர்களின் அரசனான இந்திரனே பூமியில் வந்துவிட்டானோ?' என்றுகூடச் சிலர் எண்ணினார்கள். 'அழகுக்கே எல்லையாகிய மன்மதன் மீண்டும் உருப்பெற்று இங்கு வந்துவிட்டானோ?' என்று

சிலர் நினைத்தார்கள். 'எல்லா வகையான செல்வங்களும் ஒருங்கே திரண்டு வந்த வடிவமே இவனாக இருக்க வேண்டும்' என்று வேறு சிலர் எண்ணினார்கள்.

வருங்காலத்தை உணர்ந்த அந்தப் பிராமணனுடைய மனத்திலும் இவ்வகையான எண்ணங்களே தோன்றின. அவன் போஜகுமாரனை உற்று நோக்கி, அரசனைப் பார்த்து, 'வேந்தே, போஜனுடைய சிறப்பின் பெருமையை பிரமதேவனாலும் கூற இயலாதே! வயிறு வளர்க்கும் என்னைப் போன்ற ஒரு பிராமணனால் அவனது சிறப்பை எப்படி எடுத்துக் கூற முடியும்? ஆயினும், என் சிற்றறிவுக்கு எட்டிய வரையில், ஏதோ சிலவற்றை நான் சொல்லுகிறேன். இனி அரச குமாரனைப் பள்ளிக்கூடம் அனுப்பிவிடுங்கள்' என்றான்.

அதைக் கேட்ட அரசன், 'அப்படியே' என்று சொல்லி, போஜனை மீண்டும் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி விட்டான். அதன் பிறகு பிராமணன்,

''ஐந்து பத்துடன் ஆண்டு ஓர் ஐந்துமாய்,
திங்கள் ஏழும், நாள் மூன்றும், ஐயனே!
மைந்தன் ஆளுவான், போஜன், சீர்பெறக்,
கௌடம் உட்பட, மாண்ட தென்பதம்''

என்று சொன்னான்.

அதைக் கேட்ட அரசனுடைய மனம் சட்டென்று வேறுபட்டது. அம்மன வேற்றுமையைத் தன் முகம் காட்டாதவாறு, அரசன் புன்சிரிப்புக் கொண்டான். அவனது முகம் இனிமையாகத் தோன்றியபோதிலும், களங்கமுற்றிருந்தது; மனத்தின் வேதனையால் அது சற்றே நிறம் இழந்தது. அதை மறைத்து, அரசன் அந்தப் பிராமணனுக்கு வெகுமதி யளித்து, அவனுக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டான்.

பின்பு, இரவில் அரசன் தன் பள்ளியறையை அடைந்து, மஞ்சத்தின் மீது பஞ்சணையில் படுத்த

போதிலும், அவனுக்கு உறக்கம் வரவில்லை. அவனுடைய மனம் மேன்மேலும் குழப்பம் அடைந்துகொண்டேயிருந்தது. 'அரசுத் திருமடந்தை போஜகுமாரனை வந்து அடைந்தால், அதன் பின்பு என்னை யார் மதிப்பார்கள்? அதன் பின்னர் நான் உயிரோடு இருந்தாலும், உயிரற்ற நிழல்போல வலிமையற்றுப் போவேன், அல்லவா? இந்த நிலை எனக்கு ஏற்படாதபடி, பாதுகாப்பது என்னுடைய கடமையாகும். அறிவிற் சிறந்தவனுக்கும் முயற்சி உள்ளவனுக்கும், கைகூடாதது எதுவும் இல்லை. மன இரக்கம் மிகுதியாக உள்ளவனும், எடுத்ததில் எல்லாம் ஐயம் உள்ளவனும், பிறர் என்ன சொல்லுவாரோ என்று அச்சம் கொள்பவனும், ஒரு நாளும் மேன்மை நிலையை அடைந்து, சிறப்புள்ளவனாக ஆக மாட்டான். பகைவனையும் நோயையும் தோன்றும்போதே அழித்து விடுவது நன்று. அவை முற்றிவிட்டால், அவற்றால் அழிவது உறுதி' என்று பலவாறு எண்ணினான். அவனுடைய மனத்தை உறுத்திய வேதனையால், அவனுக்கு உணவு பிடிக்கவில்லை; உறக்கமே கொள்ளவில்லை; எதிலுமே ஆசையோ மகிழ்ச்சியோ தோன்றவில்லை. உலகமே பாழடைந்ததுபோல் ஆகிவிட்டது.

இப்படி மனம் குழம்பிய அரசன், அன்றிரவு மூன்றும் யாமத்தில், தன்னந் தனியாக ஆலோசனை செய்து, ஒரு முடிவுக்கு வந்தான். போஜனைக் கொன்று விடவேண்டும் என்பதே அந்தக் கொடிய முடிவு.

# 9. முஞ்சனும் வத்ஸராஜனும்

தன்னுடைய தமையன் தன்னிடம் ஒப்பித்த ராஜ்யத்தைத் தானே ஆளவேண்டும் என்னும் தீய எண்ணத்தால் போஜனைக் கொன்றுவிடத் தீர்மானித்த முஞ்சன், அந்தக் கொடிய செயலை நிறைவேற்றுவதற்கு வேண்டிய திறமையும் மன உறுதியும் உள்ளவன் எவன் என்று ஆலோசனை செய்தான். பின்பு, வங்க தேசத்தின் அரசனாகவும், மிக்க வலிமை பொருந்தியவனாகவும், இருந்த வத்ஸராஜன் என்னும் அரசனை அழைத்து, வரும்படி தன்னுடைய மெய்காவலன் ஒருவனை அனுப்பினான். அந்த மெய்காவலன் வத்ஸராஜனை அடைந்து. அவனை வணங்கி, 'நமது அரசர் உம்மை அழைத்து வரச் சொன்னார்' என்றான்.

உடனே வத்ஸராஜன் தன் தேரில் ஏறி, பரிவாரங்கள் புடைசூழ அரச சபையின் முன் வாயிலை அடைந்தான். தேரிலிருந்து இறங்கி, அரசனுடைய முன்னிலையில் வந்து, அவனை வணங்கி, அவன் ஆணைப்படி, அங்கே ஓர் இருக்கையில் அமர்ந்தான். அரசன் அந்த அரண்மனையின் அந்தப்புரப் பகுதியில் எவரும் இருக்கலாகாது என்று உத்தரவிட்டு, யாவரையும் அப்புறப்படுத்தினான். பின்பு, அவன் வத்ஸராஜனை நோக்கி, 'நான் சொல்வதை நடத்தி வைப்பது உன் கடமை. அதை நீ மறுக்கலாகாது. உன் உயிரை வேண்டுமானாலும் கேட்பதற்கு எனக்கு அதிகாரம் உண்டு, அல்லவா?

'மன்னன் தன் அடியார்க் கெல்லாம்
அளிப்பது மானம் ஒன்றே.
அன்னவன் ஏவாமுன்னம்
ஆருயிர் அடியர் ஈவர்'

'இப்பொழுது போஜகுமாரனை, இரவின் முதல் யாமத்திலே, புவனேசுவரியின் காட்டிற்கு அழைத்துச் சென்று, அங்கே அவனைக் கொன்றுவிடவேண்டும். பின்பு, அவனுடைய தலையை இங்கே என்னுடைய அந்தப்புரத்தில் கொண்டுவந்து காட்ட வேண்டும்' என்றான்.

இந்தக் கொடிய ஆணையைக் கேட்ட வத்ஸராஜன் பரபரப்போடு எழுந்து, அரசனை வணங்கி, 'அரசே, உங்களுடைய ஆணையை நடத்திவைப்பது எனது கடமை என்பதை அறிவேன். ஆயினும், நீங்கள் என்மீது இது வரைக்கும் காட்டிவந்த அன்பின் மிகுதியால், எனக்குச் சிறிது துணிவு ஏற்பட்டிருக்கிறது. அது காரணமாக, இரண்டொரு சொற்களைச் சொல்ல விரும்புகிறேன். நான் சொல்லுவது எத்துணை பிசகாயிருந்தாலும், மன்னித் தருள வேண்டுகிறேன். போஜகுமாரன்,

'பொன்னும் அற்றவன்; போர்ப்படை அற்றவன்;
வன்மை மிக்க பல் மைந்தரும்தான் இலன்;
புன்மை பஞ்சரம் மேவுறு புள் என,
உன்னை அண்டி, ஒடுங்கியே வாழ்கிறான்!'

'அப்படிப்பட்ட போஜனைக் கொல்வது எதற்காக, அரசே? நான் தலைமுறை தலைமுறையாக உங்களுக்கு அடிமைப்பட்டவன். உங்கள் பாதத்தின் நிழலில் வாழ் பவன். உங்களது கருணையால் வயிறு வளர்ப்பவன். உங்களிடத்தில் அளவு கடந்த அரசப்பற்று உள்ள வன். இந்தச் சிறுவனைக் கொல்வதற்கு யாதொரு காரணமும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை' என்றான்.

அப்போது அரசன் முந்திய நாள் காலையில் அரச சபையில் நடந்தவைகள் எல்லாவற்றையும், தொடக்கம் முதல் முடிவுவரை ஒன்றையும் விடாமல் சொன்னான். அதைக் கேட்ட வத்ஸராஜன் புன்சிரிப்போடு,

'மூன்றுலகின் நாதன் அவன், மோத மிகு ராமன்;
ஈன்று உலகைப் படைத்தவனின் இயல் புதல்வன்
வசிட்டன்.
ஆன்றவர்கள் ஏவ அவன் அரசினுக்கோர் நன்னாள்
ஊன்றி நினைத்து உரைத்தனனே, உலகு அனைத்தும் மகிழ

அன்னதொரு நன்னாளில், அரசிழந்தான் ராமன்;
பின்னவனும், மனையாளும், பின்தொடர்ந்தார் கானம்;
பொன்னனைய சீதை பறி போகவிட்டான், ஆங்கே.
அன்னமுறு பிரம்மன் மகன் அரியசொலும் வீணே!'

'ஆரியனே! யார் இவனும்? அறிவில் இவன் அற்பன்.
ஏறிய தன் பசி தீர்க்க இவண் வந்தோன் சொல்லால்,
சீரிய மன் மதன்போன்ற சிறுகுமரன் உயிரை,
கூரிய உன் வாள்முனையால் கொல்லுதலும் அறமோ?'

மேலும், எதைச் செய்தாலும் அதனால் விளையக்கூடிய நன்மை தீமைகளை நன்றாக ஆராய்ந்தே செய்யவேண்டும். ஒன்றை அவசரப்பட்டுச் செய்துவிட்டு, பின்பு அதைக் குறித்து மன வருத்தப்படுவதில் யாதொரு பயனும் இல்லை. அது அறிஞனுக்கு ஏற்றதும் ஆகாது. அத்தகைய செயலின் நினைவு அவனுடைய உயிர் உள்ளளவும் அவனுடைய மனத்தில் கிடந்து, எப்பொழுதும் உறுத்திக் கொண்டே இருக்கும்' என்று அரசனிடம் பணிவாகச் சொன்னான்.

அப்போதும் முஞ்சனுடைய மனம் மாறாதது கண்டு, வத்ஸராஜன், மீண்டும் தொடர்ந்து, 'அரசே, இன்னொன்றையும் நீங்கள் கவனிக்கவேண்டும். இந்த இளைய குமாரனைக் கொன்றுவிட்டால், அரசாங்கத்தில் நிகழக்கூடியது என்ன என்று எண்ணிப்பாருங்கள். முதுமைப் பருவம் அடைந்து, காலமான சிந்துல மன்னனின் அன்பைப் பெற்றிருந்த மகாவீரர்கள் பலர் உங்களால் அனுமதிக்கப்பட்டு, உங்கள் அண்டையிலேயே வாழ்கிறார்கள். அரசகுமாரன் உங்களால் கொல்லப்



பட்டான் என்பதை அவர்கள் அறிந்தால், உடனே புயலில் பொங்கி எழும் பெருங் கடலின் அலைகளைப் போல், அவர்கள் உங்கள் நகரம் முழுவதையும் பெரிய குழப் பத்தில் ஆழ்த்திவிடுவார்களே. சிந்துலனுக்குப் பிறகு, நீங்கள் அரசுரிமை பெற்று, வேரூன்றி நிலையாக

ஆண்டுவந்த போதிலும், பெரும்பான்மையும், நகரமக்கள் போஜனையே இப்பொழுதும் தங்களுடைய அரசனாக மதிக்கிறார்கள்.

கண்ணிய செயல்கள் நல்ல
　　கருத்தினோடு இயற்றி, பின்னர்ப்
பண்ணிய தீமை ஒன்றால்
　　பழிஉறும்; அழியும் கீர்த்தி
எண்ணெயை வார்த்துக் காத்தே,
　　இடைவிடாது எரிக்கும் தீபம்
மண்ணியல் சூறைக் காற்றால்
　　மாய்ந்திடும் நொய்தின் நன்றே.

ஆதலால் அரசே, மகனைக் கொல்வதால் எவ்வகையான நன்மையும் உண்டாகப் போவதில்லை' என்று வணக்கமாகக் கூறினான்.

இதைக் கேட்ட அரசனுக்குத் தாங்க முடியாத கோபம் வந்துவிட்டது. 'நன்று, நன்று, வத்ஸராஜ! நீ சேவகன் அல்லன். நீதான் அரசன் என்று தோன்றுகிறது' என்று படபடவென்று, சுடச்சுடப் பேசினான்.

பொறுமையால் வெறிகொண்ட தன் அரசனுடைய மனநிலையை மாற்றமுடியாது என்று தெரிந்த வத்ஸராஜன் அப்பொழுது பேசிப் பயனில்லை என்று உணர்ந்து, 'சமயம் போல் பார்த்துக் கொள்ளுவோம்' என்று மனத்தில் எண்ணிக்கொண்டு, 'உங்கள் சொல்லே எனது ஆணை' என்று வாய்விட்டுச் சொன்னான். முஞ்சனும் தன் கொடிய எண்ணம் நிறைவேறியதாக நினைத்து, மகிழ்ச்சியடைந்தான்.

# 10. வத்ஸராஜனும் போஜனும்

முஞ்சனுடைய கொடிய ஆணையைச் சிரமேற் கொண்ட வத்ஸராஜன் அரசனுடைய முன்னிலையை விட்டு அகன்றான். சூரியன் மலைவாயில் விழப்போகும் சமயமான அந்தி வேளையில், அந்தப்புரத்தின் மேல் மாடியிலிருந்து வத்ஸராஜன் படிப்படியாக இறங்கி, கடுங் கோபங்கொண்ட கூற்றுவனைப் போன்ற தோற்றத்தோடு, சபையருகே வந்தான். அவனைக் கண்டதும், சபையோர்களின் மனத்தில் அச்சம் பகீரென்று பற்றியது. அவர்கள் அங்கே அரசாங்க விஷயமாகக் கூடியிருந்த போதிலும், அவர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு சாக்குச் சொல்லிக்கொண்டு, தம்தம் வீட்டை நோக்கிப் புறப்பட்டுச் சென்றார்கள்.

சபை கலைந்தவுடன், வத்ஸராஜன் தன்னுடைய ஏவலாட்களை அழைத்து, தன் வீட்டிற்குக் காவலாக அவர்களை அனுப்பினான். பிறகு, தன்னுடைய தேரைப் புவனேசுவரியின் கோயில் இருக்கும் திசையை நோக்கித் திருப்பி நிறுத்தினான். போஜகுமாரன் தன்னுடைய ஆசிரியனிடத்தில் கல்வி கற்றுவரும் கல்வி மண்டபத்திற்குத் தன் சேவகனை அனுப்பி, அந்த ஆசிரியனைத் தன்னிடம் அழைத்து வரும்படி உத்தரவிட்டான். அந்தச் சேவகனும் விரைந்து சென்று, அந்த ஆசிரியரை நோக்கி, 'ஐயா பண்டிதரே! உங்களை வத்ஸராஜர் அழைத்து வரச் சொன்னார்' என்றான்.

அதைக் கேட்டதும், அப் பண்டிதர் இந்திரனின் வச்சிரப் படையால் அடியுண்டவனைப்போலும், பூதங்கள் அனைத்தும் உடலில் புகுந்துள்ளவனைப் போலும், நவக்கிரகங்களின் துன்புறுத்தலுக்கு உள்ளாகியவனைப்

போலும், மனம் குழம்பித் தடுமாறி நின்றான். அந்தச் சேவகன் அவருடைய கையைப் பிடித்துக்கொண்டு, வத்ஸராஜனின் முன்னிலையில் அவரைக் கொணர்ந்து நிறுத்தினான்.

அறிவிற் சிறந்த வத்ஸராஜன் அந்த ஆசிரியரை வணங்கி, அவரை நோக்கி, 'ஐயா, பண்டிதர் அவர்களே, வாருங்கள். அரசனின் குமாரனாகிய ஜயந்தனை நான் பார்க்க விரும்புகிறேன். அவனைக் கல்விச் சாலையிலிருந்து அழைத்துவரச் சொல்லுங்கள்' என்றான். ஜயந்தன் அங்கே வந்ததும், அவனை நோக்கி, 'அப்பா குழந்தாய், இன்று நீ என்ன என்ன படித்தாய்' என்று சில கேள்விகளைக் கேட்டபின் அவனை அனுப்பிவிட்டான். பிறகு, வத்ஸராஜன் அந்த ஆசிரியரை நோக்கி, 'ஐயா போஜ குமாரனை இங்கே அழைத்துவரச் சொல்லுங்கள்' என்றான்.

இந்தச் செய்தியைச் சேவகன் போஜனிடம் போய்த் தெரிவித்ததும், போஜன் கடுங்கோபம் கொண்டான். அவனுடைய கண்கள் கோபத்தால் சிவந்தன. ஆயினும், அவன் விரைவாக வெளியே வந்தான். 'அடே பாவி! உன் அரசனுடைய முக்கிய மகனையும், அரசுரிமையுள்ளவனாகவும், உள்ள என்னை அரண்மனையிலிருந்து, தன்னந் தனியாக, வெளியே வரவேண்டும் என்று ஏவ, உனக்கு என்ன துணிவு?' என்று படபடப்பாகக் கேட்டான்.

அப்போது வத்ஸராஜன், "போஜகுமாரா, நான் அரசனுடைய ஆணையை நடத்திவைக்கும் ஓர் அற்பக் கருவி. எனக்கு யாதொரு சொந்த அதிகாரமும் இல்லை" என்றான். பின்பு, போஜகுமாரனைத் தனது தேரில் உட்காரவைத்துத் தன்னுடைய கத்தியை உறையிலிருந்து உருவி ஏந்திக்கொண்டு, மகாமாயை என்னும் புவனேசுவரியின் கோயிலை நோக்கி, மிக விரைவாக, தேரில் சென்றான்.

போஜகுமாரனை வத்ஸராஜன் பிடித்துக்கொண்டு போய்விட்டான் என்ற செய்தியைக் கேட்டு, நகரமக்கள் அனைவரும் அல்லோலகல்லோலப்பட்டார்கள். நகரில் எங்கும் கோபமான சொற்களும், ஆத்திரமான ஒலிகளும் கேட்டன. 'என்ன இது! என்ன இது!' என்று கத்திக் கொண்டு படைவீரர்கள் பலர் விரைந்து திரண்டார்கள். 'வத்ஸராஜன் போஜனைக் கொல்வதற்காக அழைத்துப் போனான்' என்று அறிந்தவுடன், அவர்களுடைய கோபம் வெறியாக மாறிவிட்டது. முஞ்சனுடைய யானை மண்டபம் ஒட்டக மண்டபம், குதிரை மண்டபம், தேர் மண்டபம், முதலிய இடங்களில் சென்று அங்குள்ளவற்றை அழித்தனர். மேலும், அரச வீதிகளிலும் தெருத் திண்ணைகளிலும் அரண்மனை வாயில்களிலும், மற்றும் நகர்ப்புறம் எங்கும், பறை, பேரிகை, முதலிய கருவிகளை ஒலித்தனர். அவர்கள் உண்டாக்கிய அந்த ஓசை ஆகாயத்தைப் பிளந்து விடும்போல் தோன்றிற்று. நகர மாந்தரில் சிலர் போஜன் இறந்துவிட்டான் என்று எண்ணி வருத்தம் தாங்காமல் இறந்தார்கள்.

இந்தச் செய்தி போஜனுடைய தாயாகிய சாவித்திரி தேவிக்கு எட்டியது. அங்கு வந்த வேலைக்காரி ஒருத்தி போஜகுமாரனுக்கு நேர்ந்துள்ள அபாய நிலைமையை அவளுக்குத் தெரிவித்தாள். அதைக் கேட்டதும், உலகனைத்துக்கும் தாயைப் போன்றவளான அந்தத் தேவி, தன் கைகளால் தன் முகத்தைப் பொத்திக்கொண்டு, கண்களில் நீர் பெருக, 'அப்பா என் மகனே! உன்னுடைய சிற்றப்பனால் உனக்கு இந்தக் கதியா நேரவேண்டும்? உன் பொருட்டு நான் எத்தனை விரதங்கள் எடுத்தேன்! எத்தனை பட்டினிகள் கிடந்தேன்! அவை எல்லாம் இன்று வீணாகி விட்டனவே! உலகம் முழுவதும் வெற்றிடமாகி விட்டது போல் எனக்கு இப்பொழுது தோன்றுகிறதே! முற்றும் உணர்ந்தவராயும், முற்றும் முழு ஆற்றலும் பொருந்திய வராயும் உள்ள இறைவனால் நமது குடும்பத்தின் நற்பெயர்

முழுவதும் ஒரே அடியாகத் தொலைக்கப்பட்டு விட்டதே. நம்முடைய அடிமைகளாகிய இவர்கள் எல்லோரும், உன்னை இழந்ததால், தங்கள் தலையை இழந்தவர்களைப் போல் ஆகிவிட்டார்களே! என்று புலம்பிக்கொண்டு, மயக்கமுற்றுத் தரையில் விழுந்தாள்.

அந்திவேளையில், அந்நகரில் வீடுகள்தோறும் நெருப்பு மூட்டப்பட்டது. அதிலிருந்து எழுந்த புகையானது வானை அளாவி, எங்கும் இருள்சூழச் செய்தது. அப்பொழுது நிகழவிருக்கும் பாவச்செயலைத் தன் கண்ணால் காணப் பொருதவனைப் போலச் சூரியன் தன் வடிவத்தை மேற்குக் கடலில் மறைத்துக் கொண்டான். அந்த நேரத்தில், வத்ஸராஜன் மகாமாயையின் கோயிலை வந்தடைந்தான். அவன் அங்கே தேரை நிறுத்தி, வணக்கத்தோடு, போஜனை நோக்கி, 'ஐயா அரசகுமாரனே! என்போன்ற அடிமைகளுக்குத் தெய்வமே! இன்று நடந்த செய்தியைக் கேட்டருள வேண்டும். சோதிட நூலில் வல்லவனான யாரோ ஒரு பார்ப்பனன் இன்று காலையில் அரசசபைக்கு வந்தான். போஜகுமாரன் அரசுரிமையைப் பெற்றுச் சிறப்பாக ஆட்சி புரியப்போகிறான் என்று அவன் நமது அரசரிடம் சொன்னான். அதைக் கேட்டுப் பொறாமை கொண்ட அரசர் உங்களைக் கொல்லும்படி எனக்கு ஆணையிட்டிருக்கிறார்' என்று சொன்னான்.

அதைக் கேட்டதும், போஜன், 'ஊழின் வலிமையால் யாவும் அழிகின்றன. காலத்தின் போக்கை ஒருவராலும் தடைசெய்ய முடியாது. இவற்றை எண்ணிப்பார்:

'அலைந்தனன் ராமன் காட்டில்;
அடங்கினன் பலியும் ஆற்றல்;
உலைந்தனர் வனத்தில் பன்னாள்,
உறமுள பாண்டு மைந்தர்;
தொலைந்தனர் யது குலத்தில்
தோன்றிய வீரர் எல்லாம்;

குலந்தனன் நாட்டைத் தோற்று,
குருபியாய், நிடத வேந்தன்;
இலங்கையின் அரசனுன
இராவணன் சிறையுள் எய்தி,
கலங்கினன்; பின் இராமன்
கணையுற்று வீழ்ந்தான், அந்தோ!

செந்திருவின், கௌத்துபத்தின்,
செம்பவளக் காம்புடைய
சுந்திர மல்லிகை மலரின்
சொந்தமுள உடன்பிறந்தோன்;
அந்தம் மிகும் பாற் கடலின்
ஆண்மகனுய் அவதரித்தோன்;
கந்தரத்தில் கறையுடைய
கடவுள் அருட் பெருந்தெய்வம்

தம் தலையின் உச்சியிலே
தரித்த பெருஞ் சிறப்புடையோன்,
அந்தரத்தே உறைகின்ற
அழகு நிசித் தெய்வத்தின்
சிந்தை நிறை மெய்க் கணவன்;
சீருடையோன்; கலையுடையோன்;
சந்திரனும் இழக்கின்றுன்
தன் உடலை ஊழ் வலியால்

மேலும்,

நீர்நிலைக் கடலெலாம் நிலம் என ஆகிடும்;
ஊர் மிகு நிலமெலாம் ஒலி கடல் ஆகிடும்;
சேர் சிறு துகளெலாம் செறி மலை ஆகிடும்;
சீர் மகா மேருவும் சிறு மணல் ஆகிடும்;
வேர்விடு புல் எலாம் வச்சிரம் ஆகிடும்;
கூர்முனைக் குலிசமும் குறியபுல் ஆகிடும்;
கார்புகைத் தீ எலாம் கார் எனக் குளிர்ந்திடும்;
பார்தனில் பெய் பனி படு நெருப்பு ஆகிடும்;

யார் கணப் பொழுதிலே, யாவையும் இவ் விதம்
நீர்மையில் மாற்றுவர் நினைப்பினுல், நண்ப, அச்
சேர் திருத் தேவனின் சேவடி மலர் இணை
நேர்மையாய் நெஞ்சினில் நித்தமும் போற்றுவேன்'

இவ்வாறு போஜகுமாரன் கூறி, தேவனை வணங்கிய பின்னர், அருகிலிருந்த ஆலமரத்தின் இலை ஒன்றைப் பறித்து, அதை ஒரு கிண்ணமாக அமைத்தான். தன் உடைவாளால், தன் காலில் வடுப்படுத்தி, அதிலிருந்து சொரிந்த இரத்தத்தை அந்த ஆலிலைக் கிண்ணத்தில் ஏந்தினுன். பிறகு, ஓர் ஓலையை எடுத்து, அங்கே கிடந்த நாணற் குச்சி ஒன்றுல், அதன் மீது ஒரு பாட்டை எழுதினுன். அந்த ஓலையைச் சுருட்டி, வத்ஸராஜன் கையில் கொடுத்து, 'உனக்கு எல்லா மங்களங்களும் உண்டாகுக! இந்த ஓலைச் சுருளை அரசரிடம் கொடுக்கும் படி உன்னைக் கேட்டுக்கொள்கிறேன். இனி, அரசன் உனக்கு இட்ட ஆணையை நீ நிறைவேற்றலாம். என்னுல் அதற்கு யாதொரு தடையும் இல்லை' என்று முகமலர்ச்சி யோடு கூறினுன்.

அப்பொழுது வத்ஸராஜனுடைய தம்பி அருகில் நின்றுகொண் டிருந்தான். போஜகுமாரன் தான் இறக்கப் போகும் தறுவாயில், தன்னுடைய அபாய நிலையை நன்கு உணர்ந்தும், சிறிதும் மனம் தளராமல் இருந்ததையும், எப்பேர்ப்பட்ட வீரனுடைய மனத்தையும் கலங்கச் செய்து முகத்தை வேறுபடுத்தும் அந்த மரண வேளையிலும், அவனுடைய முகம் தோற்றப் பொலிவோடு விளங்குவதையும், அவன் கண்டான். அப்பொழுது அவனுடைய மனத்தை வியப்பும், இரக்கமும், அன்பும், பக்தியும், ஒருங்கே கலந்து நிறைத்தன. அவன் தன் தமையனுகிய வத்ஸராஜனை நோக்கி, 'நான் சொல்லப் போவதை மன்னித்தருள வேண்டும். இவ் உலகில் பிறக்கும் மனிதனுடைய உடல் நிலையானது அன்று; அழிவுள்ளது. ஒருவனுடைய உடல் அழியும்போது,



அவனுடைய செல்வமும் கூடவே நீங்கிவிடும். இறந்த பின்னும், ஒருவனைக் கைவிடாது உடன் இருப்பது அறம் ஒன்றே. ஆகையால், இப்போது நீ தர்மத்தை மறக்காமல், நடந்து கொள்வாயானால், உனக்கு என்றும் அழியாத நன்மை உண்டாகும். உன்னால் எனக்கும், நமது குடும்பத்திற்கும் புகழ் விளையும். தர்மத்தைக் கைவிட்டு, உன் பழைய அரசனின் மகனாகிய இந்த இளங்குமாரனைக் கொல்லத் துணிந்த உன்னுடையு மனம் கல்லைவிடத் திண்மையானது; அது வச்சிராயுதத்திற்கு ஒப்பானது என்று தோன்றுகிறது. இவனுடைய முகத்தைக் கண்டு, உன் கொடிய மனமும் இளகிவிடும் என்றே நான் நம்புகிறேன். உன் முகத்தைத் திருப்பாதே! இச் சிறுவனின் முகத்தைப் பார்!' என்றான்.

ஏற்கெனவே, அரசகுமாரன்மீது அன்புகொண்டிருந்த வத்ஸராஜனின் மனம், அவன் தம்பி இவ்வாறு கூறியதும், முற்றும் இளகிவிட்டது. அவன் மன உறுதிகொண்டு, அரசனுடைய ஆணையை மீறத் துணிந்தான். உடனே, போஜகுமாரனை நோக்கி, 'இளவரசே, நான் இதுவரை செய்த பிழைகளை மன்னிக்க வேண்டும்' என்று, அன்பு தழுதழுக்கும் குரலில் கூறி, அவனை வணங்கினான். பின்பு, நள்ளிருளில் அவனைத் தேரில் ஏற்றி, நகரின் வெளிப்புறமிருந்து தன் மாளிகைச்கு அழைத்து வந்து, அதனுள் தரை மட்டத்தின் அடியில் தோண்டியிருந்த ஒரு நிலவறையில் ஒளித்துவைத்துப் பத்திரமாகக் காப்பாற்றி வந்தான்.

அதன் பின்பு, பொம்மை செய்வதில் வல்லவர்களான சிற்பிகளைக் கொண்டு, காதில் விளங்கும் குண்டலங்களும் துடிதுடிக்கும் உதடுகளும், மூடிய கண்களும் உடையதாயும், போஜனின் முகத்தைப் போன்றதாயும், உள்ள ஒரு செயற்கை முகத்தைச் செய்வித்தான். அதன் கழுத்தை உதிரத்தில் தோய்த்து, அரசனுடைய அரண்மனைக்கு எடுத்துச் சென்று, அரசனை வணங்கி, 'தேவரீருடைய ஆணைப்படி செய்தாய்விட்டது என்றான்.

# 11. முஞ்சனும் போஜனும்

உதிரம் தோய்ந்த அந்தத் தலையைக் கண்ட முஞ்சன் போஜகுமாரன் தன்னுடைய ஆணைப்படி வத்ஸராஜனால் கொல்லப்பட்டதாக எண்ணி, மிக்க மகிழ்ச்சி அடைந்தான். அவன் வத்ஸராஜனை நோக்கி, 'வத்ஸராஜ, நீ இச் சிறுவனுடைய தலையை வாங்கும் பொருட்டு, உன் வாளை வீசப்போகும் சமயத்தில், இவன் ஏதாவது சொன்னானா?' என்றான்.

உடனே வத்ஸராஜன் வேறு ஒன்றுமே சொல்லாமல், போஜன் தன்னிடம் கொடுத்த ஓலைச் சுருளை அரசனிடம் கொடுத்தான். அரசனும் அதைப் பிறர் ஒருவரும் அறியலாகாது என்று எண்ணி, தன் இராணியை அழைத்து, ஒரு விளக்கை எடுத்து வரச்சொன்னான். அவள் தன் கரத்தில் ஏந்தி வந்த கைவிளக்கின் ஒளியில், அந்த ஓலையில் எழுதியிருந்த எழுத்துக்களைப் படித்தான். அதில் பின் வருமாறு வரைந்திருந்தது:

'கிருதயுக திலகம்எனக்
கீர்த்திபெற உலகாண்ட
நிருபன் அவன், மாந்தாதான்
நீங்கினனே? இலங்கைஎனும்
நிருதர் நகர்க்கு இணை இயற்றி,
நெடுங் கணையால் தசமுகனைக்
குருதி பெயக் கொன்றானும்
கூறுதி நீ, யாங்கு உளனே?
சுருதி நிறை திட்டிரனும்,
சொல்லரிய மன்னவரும்,
மிருத நிலை எய்தினரே!
மேல் இவரோடு இவ்வுலகம்
ஒருதரமும் சென்றதிலை!
உன்னுடனே செல்லும் இன்றே!'



அதைப் படித்ததும், அதன் கருத்தை உணர்ந்த அரசன், தனது படுக்கையிலிருந்து தொப்பென்று தரையில் விழுந்தான். அவனுடைய தேவியானவள் தன் முந்தானையை விசிறி, முகத்தில் வீசிய காற்றினால், அவன் மயக்கம் தெளிந்தான். அவள், தன்னுடைய மெல்லிய கரத்தினால், தன் நெற்றியைத் தடவிக் கொடுப்பதை உணர்ந்து, 'தேவி, இனி என்னைத் தொடாதே! நான் என் மகனைக் கொலை செய்த கொடும் பாவி!' என்று புலம்பிக்கொண்டு, பித்துப் பிடித்தவனைப் போல் சோர்ந்திருந்தான். பின்பு, சேவகனை நோக்கி, 'என் மந்திரிகளையும் புரோகிதர்களையும் உடனே அழைத்து வா' என்றான். அவர்கள் எல்லோரும் விரைந்து, அங்கே வந்து சேர்ந்தார்கள்.

அரசன் அவர்களை நோக்கி, 'நான் என் மகனைக் கொன்ற கொலைபாதகன். இந்தப் பெரும் பாவம் என்னை விட்டு நீங்குமா? அதற்கு மாற்றும் வழி எதையேனும் முன்னோர்கள் விதித்திருந்தால், அதை எனக்குத் தெரிவிக்கவேண்டும்' என்றான். அவர்கள் உடனே, 'அரசே, முன்னோர்கள் இதற்கு மாற்றும் வழி ஒன்றே ஒன்றைத் தான் விதித்துள்ளார்கள். அதாவது, உடனே தீயை மூட்டி, அதில் பணிவோடு புகுந்து, உடலைப் துறப்பது' என்றார்கள்.

அப்பொழுது அங்கிருந்த புத்திசாகரன் தன் துயரத்தை அடக்க இயலாதவனாய், ஆத்திரத்தோடு முஞ்சனை நோக்கி, 'நீ கேடு கெட்ட அரசன்! உன்னிலும் கேடு கெட்டவன், உன் பக்கத்தில் இருக்கும் வத்ஸராஜன்! உன்னைப் போன்ற ஒருவன் கையில் தன் அரசையும் கொடுத்து, மடியில் அருமை மகனையும் வைத்துவிட்டுச் சென்றான், நல்லறமே வடிவெடுத்தவன் போன்ற எங்கள் மன்னனான சிந்துலன். ஆகா! அவனுக்கு நீ செய்த துரோகத்தை யாரால் அளவிட முடியும்? தன் தமையனுக்கும் மகனுக்கும் இவ்வளவு கெடுதி விளைத்தவர்கள் உன்னைப்போல் எவருமே இதுவரை இருந்ததில்லை!' என்று படபடப்பாகச் சொன்னான். அவன் கூறியது உண்மை என்று உணர்ந்த முஞ்சன், யாதொரு மறுமொழியும் பேசாமல், தலை குனிந்து நின்றான்,

இதற்கிடையில், 'தன் மகனைக் கொன்ற அரசன் அந்தப் பாவத்திற்கு அஞ்சி, இன்று நெருப்பில் விழப் போகிறான்' என்னும் வதந்தி உண்டாகி, வெகு விரைவில் நகரெங்கும் பரவி விட்டது. நகரில் உள்ளவர்களும், சுற்றுப்புற ஊர்களில் உள்ளவர்களும், திரளாகக் கூடிவிட்டார்கள். அதைக் கண்ட புத்திசாகரன் அரண்மனை வாயிற்காப்போனை அழைத்து, 'எவனாயிருந்தாலும், அவனை அரண்மனையின் உள்ளே வரவிடாதே' என்று எச்சரிக்கை செய்துவிட்டு, அரசனைக் கொலு மண்டபத்

தின் அருகில் அரண்மனைக்குள் இருக்கச் செய்து, தான் மட்டும் கொலு மண்டபத்தை அடைந்து, அங்கே தனியாக வீற்றிருந்தான்.

அரசன் உயிர் துறக்கப் போகிறுன் என்ற செய்தி வத்ஸராஜனுடைய காதிலும் விழுந்தது. அவன், மிகவும் விரைவாக, அரசனின் கொலுமண்டபத்திற்கு வந்து, அங்கிருந்த புத்திசாகரனைக் கண்டு வணங்கி, அவனுக்கு அருகில் வந்து, மிகவும் மெதுவான குரலில், 'ஐயா, போஜனை நான் காப்பாற்றி வைத்திருக்கிறேன்' என்று காதோடு சொன்னுன். அதைக் கேட்ட புத்திசாகரன் வேறு ஒருவருக்கும் கேட்காதபடி, வத்ஸராஜனின் காதோடு சில சொற்களைச் சொன்னுன். அவற்றைக் கேட்ட வத்ஸராஜன் சட்டென வெளியே சென்றுன்.

அதன் பின்னர்ச் சிறிது நேரம் சென்றது. எங்கும் பரபரப்பும் கவலையும் குடிகொண் டிருந்தன. அப் பொழுது உயர்ந்த வகை யானைக் கொம்பினுல் செய்த தண்டத்தைக் கையில் ஏந்தியவராயும், புதிதாய்த் தலையில் செந்நிறச் சடை முடி சூடியவராயும், கர்ப்பூரம் கலந்த நறுமணச் சாம்பரை உடல் முழுவதும் பூசியவ ராயும், மன்மதன் போன்ற அழகிய உருவம் உடையவ ராயும், படிக மணியால் செய்த குண்டலங்களைக் காதில் அணிந்தவராயும், இடுப்பில் சிறிய காஷாய உடையை அணிந்தவராயும், பிறைச் சந்திரனைச் சூடிய சிவபெரு மானே பூமியில் இறங்கி வந்தது போன்ற தோற்றப் பொலிவு உடையவராயும், உள்ள காபாலிகச் சந்நியாசி ஒருவர் அரச சபைக்கு வந்து சேர்ந்தார். அவரைக் கண்டதும், புத்திசாகரர் எழுந்திருந்து அவரை வணங்கி, "யோகீசுவரரே! தாங்கள் எங்கிருந்து இங்கே வந்து சேர்ந்தீர்கள்? தங்களுடைய இருப்பிடம் யாது? தங்களைப் பார்த்தால், தாங்கள் ஒரு காபாலிகர் என்று தோன்று கிறதே. அப்படியாயின், தாங்கள் எத்தனையோ சிறந்த

கலைகளில் வல்லவராக இருப்பீர்களே. எத்தனையோ சிறந்த மருந்துகளையும் அறிந்திருப்பீர்களே?' என்ருன்.

அதற்கு அந்த யோகி,

''நாடுதொறும், நாடுதொறும் நமக்குளது வீடு;
வீடுதொறும் வீடுதொறும் மேன்மையுடன் சோறு;
ஓடுபல ஆறுகுளம் தோறும் உள உண்ணிர்;
ஆடு சிவன் அடியார்கட்கு ஏதுகுறை! ஐயா!

என் போன்றவர்களுக்கு ஊர் என்பது ஒன்று இல்லை. ''யாதும் ஊரே, யாவரும் கேளிர்; நான் உலகம் முழுவதும் சுற்றி வருகிறேன். என் ஆசிரியரின் அறிவுரையின்படி நடந்து வருகிறேன். உலகம் முழுவதையும் உள்ளங்கையில் நெல்லிக்கனியைப்போல் பார்க்கும் ஆற்றலை என் ஆசான் எனக்கு அருளியுள்ளார். பாம்பினுல் கடியுண்டவர், விஷம் மருகிச் சீர்குலைந்தவர், தீராநோயினுல் வருந்துபவர், அம்பு முதலியவைகளால் தலை அறுப்புண்டவர், முதுமையால் உடல் குலைந்தவர், ஆகியவர் எவராயினும் அவரை ஒரு நொடியில் 'நோயற்ற மொய்ம்பினராகச் செய்யும் சக்தி எனக்கு உண்டு' என்று கம்பீரமாகச் சொன்னுர்.

அரச சபைக்கு அப்பால், ஒரு சுவரின் மறைவில் நின்று, எல்லாச் செய்திகளையும் கவனமாகக் கேட்டு வந்த அரசன், உடனே கொலுமண்டபத்திற்கு வந்து, உடலுறுப்பு எட்டும் மண்ணைத் தீண்டக் காபாலிகரின் காலில் விழுந்து வணங்கி, 'யோகீசுவரரே! சிவபெருமானுக்கு ஒப்பானவரே! பிறருக்கு உதவி புரிவதையே வாழ்க்கை லட்சியமாகக் கொண்டவரே! என் வேண்டுகோளுக்குத் தாங்கள் இணங்கவேண்டும். மிகக் கொடும் பாவியான என்னுல் என் மகன் கொல்லப்பட்டான். அவனுக்கு உயிரளித்து, என்னைக் காப்பாற்றி அருள வேண்டும்!' என்று மன்ருடினுன்.

அதைக் கேட்ட காபாலிகர், 'அரசே, நீர் சிறிதும் அஞ்சவேண்டாம். உம்முடைய மகனை இறக்கவிட மாட்டேன். நான் வணங்கும் தெய்வமாகிய சிவபெரு மானின் அருளால், அவன் இந்த அரண்மனைக்கு விரைவில் வந்து சேருவான். ஆனால், அதன் பொருட்டுச் சில வேள்விகளைச் செய்யவேண்டும். அதற்கு வேண்டிய பொருள்களை எல்லாம், புத்திசாகரன் மூலமாக, ஊருக்கு வெளியிலுள்ள மயானப் பகுதிக்கு அனுப்பிவைக்க வேண்டுகிறேன்' என்றார். அரசனும், 'அவ்வாறே செய் யுங்கள்' என்று புத்திசாகரனை ஏவ, அவரும் வெளியே சென்றார்.

பின்பு, மந்திரி, போஜ குமாரனுக்கு மாறு வேடம் அணிவித்து, ஆற்றின் கரையில் உள்ள மயானத்து அவனைக்கொண்டு சேர்த்து, வேள்விகளைச் செய்வித்து 'யோகியின் மந்திரத்தால் போஜகுமாரன் பிழைப்பு மூட்டப் பட்டான்' என்ற செய்தியை எங்கும் பரவச் செய்தார்.

பிறகு, புத்திசாகரர் முதலியோர் புடை சூழ, போஜ யானையில் ஏறி, அரண்மனையை வந்தடைந்தா முஞ்சனும், நகர மக்கள் அனைவரும், அவனைக் கண் அளவு கடந்த மகிழ்ச்சி அடைந்தார்கள். அதன் பிறகு முஞ்சன் போஜ குமாரனைத் தாரா நகரின் அரசனாக மு சூட்டினான். பின்பு, அவன் தன் மனைவியரோடு எத் துக்குத் தவம் செய்யப் போய்விட்டான்.

அன்று முதல் போஜராஜன் மிகச் சிறப்பாக ஆண்டு, கவிகள் பலரையும் ஆதரித்து, மேன்மேலும் தன் புகழை வளர்த்து வந்தான்.

முற்றும்